# நடத்திய பரிசோதனைகள் நிரூபிக்கின்றன...







# பிஸ்கட் என்றல் இதுதான்—சுவைக்கும்

## வைட்டமின்களுக்கும் போஷாக்குக்கும் இதுதான்:

பிரிட்டானியா

# க்ளூக்கோஸ்-D



பிரிட்டானியா க்ளூக்கோஸ்-Dயுடன் மற்றொரு முன்னணி ஏக க்ளூக்கோஸ் பிஸ்கட்டை ஒப்பிட்டுப் பார்த்த பரிசோதனைகளில் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது: வைட்டமின் சத்திலும், மொத்த போஷாக்குத் தன்மையிலும் உயர்ந்தது க்ளூக்கோஸ்-D பிஸ்கட் தான். இனிமைக்கும், சுவைக்கும், முறுமுறுப்புக்கும், அதிகமாக விரும்பப்படுகிறது. சக்தி வேண்டுமா—க்ளூக்கோஸையும் விட 20 சத விகிதம் அதிக சக்தியைத் தருகிறது க்ளூக்கோஸ்-D. பிரிட்டானியா க்ளூக்கோஸ்-D பிஸ்கட்—தித்திக்கும் சக்தி!




எனவேதான், வேறெந்த க்ளூக்கோஸ் பிஸ்கட்டையும் விட அதிக மக்களைக் கவர்ந்துள்ளது பிரிட்டானியா க்ளூக்கோஸ்-D

பிரிட்டானியா பிரிட்டானியா பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை

லின்டாஸ்-BBC-GL-19-140TH



# கல்கி

அகலஞும் ஆனி 21
ஜூலை 4, 1976



**நான்கு தலைமுறைக்கு நிலைத்தவர்!**

இந்தியத் திரைப்பட வரலாற்றில், நான்கு தலைமுறையினரிடம் புகழ்பெற்ற ஒரே நடிகர் அசோக்குமார். நாற்பதாண்டு காலம் திரையுலகில் இருந்து வரும் மகத்தான வாய்ப்புப் பெற்ற ஒரே நடிகரும் கூட!

நடிக்கத்தான் அசோக்குமாருக்குத் தெரியுமா?

பியானோ இசைக்கவும், கைரேகை பார்க்கவும் தெரிந்தவர் அசோக்குமார்! இவை அவருக்குப் பொழுதுபோக்கு.

அசோக்குமார் வாழ்க்கையைத் தபால் இலாகா குமாஸ்தாவாகத் தொடங்கியவர்.

தகவல்: ஏ. சுவாமிநாதன்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.





○ நட்புப் புன்னகை மலர்கிறது. நலன்கள் பலவும் சேர்கிறது.

○ கூட்டறிக்கை கையெழுத்தாகிறது.

○ "ருஷ்ய விஜயம் மாபெரும் வெற்றி போலிருக்கிறதே"— பிரதமருக்குப் புதுதில்லி விமான நிலயத்தில் வரவேற்பு.

# உறுதி தொனித்தது:

"வாஷ இந்திரா மலதி யேத்ஸ்!"

குரல் கேட்டு நிமிர்ந்து பார்த்தேன். முகமறியாத ஒரு ருஷ்யர் சிரமப்பட்டுக் கைகளைக் குவித்து வணக்கம் தெரிவித்தார். நான் பதில் கும்பிடு போடுவதற்குள் அவர் என் கையைப் பற்றிக் குலுக்கி, "உங்கள் இந்திரா அருமையானவர்!" என்று மீண்டும் உற்சாகமாகக் கூறினார். நான் என்ன சொல்வது என்று தெரியாமல் அசடு வழிந்தேன்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? உண்மையாகத்தான் சொல்லுகிறேன்" என்று தொடங்கி நீண்ட, "இந்திரா புராணம்" பாடித் தீர்த்தார் அவர்.

அவருடைய சொல் மழையிலிருந்து விடுபட்டு வீடு திரும்பினேன். முகப்புத் தோட்டத்தில் பெஞ்சுகளில் அமர்ந்து காற்று வாங்கிக் கொண்டிருந்தவர்கள் யாரோ புதியவனைப் பார்ப்பது போல் என்னை வியந்துநோக்கக் கண்டேன். வழக்கமாக இத்தகைய சந்தர்ப்பங்களில் நேர்வது போன்று என் கால்கள் பின்னிக் கொண்டன. தளர் நடை நடந்தேன்.

"ஆமாம், உங்கள் பிரதமருக்கு என்ன வயது?"

கேட்டவர் பக்கத்து ஃப்ளாட்டில் வசிக்கும் மாது.

"ருஷ்யப் புரட்சியின் வயது" என்று 'சாமர்த்தியமாக' விடையளித்தேன்.

கூடியிருந்த மாதர்களிடையே ஒரே கலகலப்பு. அப்படி இருக்காது என்பதுதான் அவர்கள் செய்த ஒலிகளின் பொருள்.

"ஆமாம். எத்தனையோ தொல்லைகள், ஓய்வு ஒழிவு இல்லாத வேலை, ஆனாலும் எவ்வளவு இளமையாகத் தோற்றம் அளிக்கிறார்! யோகம் பயில்கிறார் போலிருக்கிறது" என்று பொதுக் கருத்துக்குக் குரல் கொடுத்தார் ஒரு மூதாட்டியார்.

• • •

இந்திரா காந்தி சோவியத் மக்களுக்குப் புதியவர் அல்ல. தம் தந்தையாருடனும் தனியாகவும் பல முறை சோவியத் நாட்டுக்கு வந்திருக்கிறார். பிரதமர் ஆன பிறகும் இரண்டு தடவைகள் வருகை தந்திருக்கிறார். ஆனால் முன் ஒரு போதும் மக்கள் பேச்சில் அவர் இவ்வளவு 'அடிபட்டதில்லை'.

சோவியத் தலைவர்கள் அளித்த சம்பிரதாயமான வரவேற்பில்கூட உளமார்ந்த தன்மையைக் காண முடிந்தது. விமான நிலயத்தில் பிரேஷ்னிவும் கஸிகினும் மற்றத் தலைவர்களும் நெருங்கிய நண்பரை எதிர்கொள்வது போன்று நம் பிரதமரை முகம் மலர வரவேற்கிறார்கள்.

இதன் காரணத்தைப் பல நண்பர்களின் பேச்சிலிருந்து ஒருவாறு ஊகித்துக் கொண்டேன். முன்பு வந்த இந்திரா துணைக்கோள் போலத் தந்தையின் ஒளியாலும் பின்னர் பதவியின் ஒளியாலும் ஒளி பெற்றவர். இப்பொழுது வந்த இந்திராவோ, செயல்வீரர். மிக மிகக் கடுமையான சோதனைகளில் தேறியவர். தீர்க்கவே முடியாதவையாகத் தோன்





# நட்பு நிலைத்தது!

## பூர்ணம் சோமசுந்தரம்

றிய சிக்கல்களை வியப்பூட்டும் துணிவுடனும் நெஞ்சுரத்துடனும் தீர்த்தவர். போராட்டத்தில் கலங்காதவர்.

இந்தப் பண்புகள் செயல்வீரர்களான சோவியத் மக்களுக்கு அவர் மீது தனிப்பட்ட மரியாதையை ஏற்படுத்தியிருப்பதில் வியப்பில்லை.

பொதுவாகவே சோவியத் மக்கள் இந்தியா மீது மிகுந்த அன்பு கொண்டவர்கள். இந்திய நிகழ்ச்சிகளை ஆர்வத்துடன் கவனிப்பவர்கள், தாம் இந்திய மண்ணுடன் இரண்டறக் கலந்துவிட விரும்புவதாகக் கூறிய நேருவின் மரண சாஸனம் சோவியத் பொது மக்களை உருக்கிவிட்டது. ''நேரு தங்க வேச்சின்!'' — நேரு நெடுங்காலம் வாழ்வார் — என்று அப்போது பலர் கூறக் கேட்டேன். ஒரு காசு சொத்து சேர்த்து வைக்காமல் இறந்த லால்பகாதூர் சாஸ்திரியின் எளிமையும் சோவியத் மக்களைக் கவர்ந்தது.

இந்தியாவில் நடக்கும் சில நிகழ்ச்சிகள் தங்களுக்குப் பிடிக்காதவையாகவோ விளங்காதவையாகவோ இருக்கும் போதுகூட சோவியத் மக்கள் அவற்றைப் புரிந்து கொள்ளவும் அவற்றுக்கு ஏதேனும் சமாதானம் தேடவும் முயல்வதைப் பார்த்திருக்கிறேன். உதாரணமாக, நெருக்கடி நிலை பிரகடனம் செய்யப்பட்டபோது என் பல சோவியத் நண்பர்கள் திடுக்கிட்டார்கள். இதன் விளைவு என்ன ஆகுமோ என்று கலங்கினார்கள். ஆயினும் அதைப் புரிந்து கொள்ள முயன்றார்கள். ஒரு நண்பர், அதற்கு முன் இந்தியாவில் இருந்த நிலைமையைக் குறிப்பிட்டு, ''இது சுதந்திரம் என்றால் அராஜகம் எது என்று எனக்கு விளங்கவில்லை. இந்த அராஜகத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தது இந்திராவின் துணிவைக் காட்டுகிறது'' என்றார்.

அதே சமயம் பலவித ஐயங்களும் சோவியத் மக்களுக்கு உண்டாயின. ''அரசாங்க இயந்திரம் நேர்மையுடன் செயல்படுமா? சில்லறை அதிகாரிகள் நிலைமையைச் சாதகமாக எடுத்துக் கொண்டு 'பழங் கணக்குகளைத் தீர்த்துக் கொள்ள' முற்பட மாட்டார்களா? பிரதமருக்கு மிக நெருங்கியவர்கள் அவரது நோக்கங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் 'அதிதீவிரக் கெடுபிடிகள்' பண்ண மாட்டார்களா? விளைவாகப் பொதுமக்களிடையே பிரதமருக்கே கெட்ட பெயர் வந்துவிடாதா?'' இப்படிப் பல சந்தேகங்கள். (இத்தகைய சந்தேகங்கள் மாஸ்கோவாழ் இந்தியர்களான எங்களுக்கும் ஏற்பட்டன என்பதை இதே கையோடு சொல்லி விடுகிறேன். அளவுகடந்த அதிகாரம் ஒரே கையில் குவியும்போது வழக்கமாக ஏற்படுவது போல, மற்றவர்களின் பயனுள்ள யோசனைகளையும் புறக்கணிக்கும் அளவுக்குப் பிரதமர் 'தனி' ஆகிவிடுவாரோ என்று கூட எங்களில் சிலர் அஞ்சினோம்.)

ஆயினும், மொத்தத்தில் பிரதமரின் உறுதியான நடவடிக்கை இந்தியாவின் விரைந்த வளர்ச்சிக்குப் பெரிதும் தடையாக இருந்த ஒழுங்கீனத்தை அகற்றி, கட்டுப்பாட்டுடன் உழைக்கும் உணர்வை மக்களுக்கு ஏற்படுத்திவிட்டது என்பதே சோவியத் மக்களின் பொதுவான கருத்து.

அண்மையில் இந்தியா சென்று வந்த சோவியத் நண்

---

### டாக்டர் இந்திரா

சோவியத் விஞ்ஞானப் பேரவையின் சார்பில் இந்திரா காந்திக்கு ''விஞ்ஞான டாக்டர்'' பட்டம் வழங்கப்பட்டது. இது அவருக்கு இங்கே அளிக்கப்பட்ட இரண்டாவது டாக்டர் பட்டம். 1971ம் ஆண்டு அவர் இங்கே வந்திருந்தபோது மாஸ்கோ அரசாங்கப் பல்கலைக் கழகம் அவருக்கு டாக்டர் பட்டம் அளித்துக் கௌரவித்தது.

விஞ்ஞானப் பேரவை அளித்த டாக்டர் பட்டம் பற்றிக் குறிப்பிடுகையில் ''இந்திய மக்கள்பால் உங்களுக்கு உள்ள மதிப்பு, அவர்கள் மேல் நீங்கள் கொண்டிருக்கும் ஆழ்ந்த நட்பு ஆகியவற்றின் அடையாளமாக இந்தக் கௌரவத்தை ஏற்றுக் கொள்கிறேன்'' என்றார் இந்தியப் பிரதமர்.

தாம் கருவாக விஞ்ஞானி ஆகிவிட்டதாகப் பிரதமர் எண்ணிவிடாதது மற்ற அரசியல் தலைவர்களுக்கு வழி காட்டும் என்று மாஸ்கோ இந்தியர்கள் நம்புகிறார்கள்.



## பிரதமர் அடித்த 'ஜோக்'

மாஸ்கோ இந்தியர்கள் அளித்த வரவேற்பின் போது அரசாங்க தூதர் குஜ்ரால் வெளி விவகார அமைச்சர் சவான் பேசுவார் என்று அறிவித்தார். சவான் பேசுகையில் விஷமப் புன்னகையுடன், "நானும் உங்களைப் போலவே பிரதமரின் பேச்சைக் கேட்க ஆவலாய் இருக்கிறேன். இப்போது பிரதமர் பேசுவார்" என்று கூறி ஒதுங்கிக்கொண்டார். பின்பு பேச எழுந்த பிரதமர், "பார்த்தீர்களா வேடிக்கையை! அரசாங்க தூதர் பொறுப்பை வெளி விவகார அமைச்சரிடம் தள்ளி விட்டு விலகிக் கொண்டார். இவர் அதை என்மேல் சுமத்திவிட்டு நழுவுகிறார். நான்தான் காரியத்தைத் தலைப் பொறுப்பாக நிறைவேற்ற வேண்டி இருக்கிறது" என்றார்.



பிரதமரின் இந்தச் சொற்களுக்கு 'உள்ளர்த்தம்' ஏதாவது இருக்குமா என்று சில குதர்க்கவாதிகள் ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள்.

---

பார்கள் அங்கு ஏற்பட்டிருக்கும் பல நல்ல மாறுதல்களைப் பாராட்டியதைக் கேட்டேன்.

● ● ●

பிரதமர் மாஸ்கோவில் மூன்று நாட்கள் தான் தங்கியிருந்தார். ஜூன் எட்டாந் தேதி வந்தவர் பதினோராந் தேதி ஆர்மீனியாவின் தலைநகர் யெரெவானுக்குப் பறந்து சென்றார். அங்கிருந்து ஜார்ஜியத் தலைநகர் த்பிலிஸி (இந்திராகாந்திக்கு மிகவும் பிடித்த நகரம் இது) போய்விட்டு, பதின்மூன்றாந் தேதி இந்தியா திரும்பிவிட்டார்.

இந்த நாட்களில் அவர் நடந்து கொண்ட விதமும் பேசிய பேச்சுக்களும் அவற்றில் தொனித்த உறுதியும் சோவியத் மக்களுக்கு அவர் மீது இருந்த மதிப்பை மேலும் உயர்த்தி விட்டன. கூச்சப் புன்னகையுடன் தந்தையைத் தொடர்ந்து வரும் இந்திரா பிரியதர்ஷினி அல்ல இவர், பத்திரிகையாளர்களின் கேள்விகளுக்குத் தயங்கித் தயங்கி, மென்று விழுங்கிக் கொண்டு விடையளித்த பழைய இந்திராகாந்தியும் அல்ல இவர், தமக்கென்று சில கோட்பாடுகளையும் கொள்கைகளையும் வரையறை செய்து கொண்டு அவற்றை உறுதியாகக் கடைப்பிடிக்கும் உளத் திண்மை வாய்ந்த தலைவர் என்பதை இந்தியர்களாகிய நாங்களும் உணர்ந்தோம்.

சோவியத் யூனியனின் நட்பும் ஒத்துழைப்பும் இந்தியாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாதவை என்பதை அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார். இந்தியாவுக்குக் கடுமையான சோதனைகளும் இடர்களும் நேர்ந்த போது சோவியத் அரசாங்கம் தயங்காமல் விரைந்து உதவி அளித்து நாட்டை ஆபத்துக்களிலிருந்து காத்ததற்கு உளமார்ந்த நன்றி செலுத்தினார். நேருவின் காலத்தில் தொடங்கிய இந்திய — சோவியத் நட்பும் ஒத்துழைப்பும் இன்று பல கிளைகள் விட்டுத் தழைத்துப் பயனுள்ள கனிகள் ஈன்று வருவதைக் குறிப்பிட்டார். இந்த ஒத்துழைப்பு இந்தியாவின் பொருளாதார, பண்பாட்டு வாழ்வின் எல்லாத் துறைகளிலும் நாளுக்கு நாள் வளர்ந்து வருவதைச் சுட்டிக்காட்டி, இந்த வளர்ச்சி இடையீடின்றித் தொடரும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

ருஷ்யாவில் நடந்த சோஷலிஸப் புரட்சி இந்திய மக்களிடையே ஏற்படுத்திய விழிப்பையும் இந்தியாவின் விடுதலை இயக்கத்துக்கு அது அளித்த ஊக்கத்தையும் இந்திராகாந்தி நினைவுகூர்ந்தார்.

மாமனிதர் லெனின் ருஷ்யப் புரட்சிக்குத் தலைமை தாங்கி நடத்தினார். அதே போல் இந்திய விடுதலை இயக்கத்தை வெற்றிக்கு இட்டுச் சென்றவர் மகாத்மா காந்தி. அவருடைய உயர்ந்த கோட்பாடுகள் இந்திய மக்களுக்கு எப்போதும் நல்வழி காட்டி வரும்.

சமூக அநீதிகள் ஒழிய வேண்டும், ஒரு சிலர் சமூக உழைப்பின் பயன்கள் அனைத்தையும் விருப்பம் போல் அனுபவிப்பதும் மிகப் பெரும்பாலான மக்கள் இன்மையில் வாடுவதும் தகாது என்பதை இந்திய மக்கள் உணர்கிறார்கள். ஆனால் இந்த நிலையைத் திடீரென்று மாற்றிவிட முடியாது. படிப்படியாகத் தான் முன்னேற வேண்டும்.

இந்தியா தொன்மையான பண்பாடும் நெடுங்கால மரபுகளும் உள்ள நாடு. இந்த மரபுகளில் சில தீங்கானவை, முன்னேற்றத்துக்குத் தடையாக இருப்பவை. அவற்றைக் கைவிடுவது அவசியம். ஆனால் பண்பாட்டிலும் மரபுகளிலும் உள்ள நல்ல அம்சங்களைப் போற்றிப் பாதுகாப்பதும் இன்றியமையாதது என்பது இந்திய அறிஞர்களின் கருத்து. எனவே, பயன் கிடைப்பதில் தாமதம் நேர்ந்தாலும், ஆர அமரச் சிந்தித்து, எச்சரிக்கையுடன் உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். வேறுவிதமான வரலாற்றுச் சூழலில் மற்ற நாடுகள் கடைப்பிடித்த வழிகளை இந்தியா அப்படியே பின்பற்ற முடியாது.

இவையே பிரதமர் தமது பல பேச்சுக்களில் வெளியிட்ட முக்கியமான கருத்துக்கள்.

இவை சோவியத் தலைவர்களின் கருத்துக்களுக்கு முரணானவை அல்ல. புரட்சியை 'ஏற்றுமதி' செய்ய முடியாது, ஒவ்வொரு நாடும் தன் மரபுகளுக்கும் வரலாற்றுச் சூழ்நிலைக்கும் ஏற்ற முறைகளைக் கையாண்டு சோஷலிஸக் குறிக்கோளை அடையும், அடைய வேண்டும் என்ற கருத்தை லெனின் பல சந்தர்ப்பங்களில் தெளிவாக வெளியிட்டிருக்கிறார். பிற சோவியத் தலைவர்களின் கருத்தும் இதுவே.

பிரதமர் இந்திரா காந்தியின் இந்த சோவியத் பயணத்தின் விளைவாக இரு நாடுகளுக்கும் இடையே நல்லுறவும் நட்பும் ஒத்துழைப்பும் இன்னும் வலுப்பட்டிருக்கின்றன என்பதை இதன் முடிவில் வெளியான கூட்டறிக்கை காட்டுகிறது.

ஜூன் 8ந் தேதி சோவியத் நாடாளுமன்றமும் அரசாங்கமும் பிரதமருக்கு அளித்த விருந்தின்போது பிரேஷ்னில் கூறிய சொற்கள் சோவியத் மக்களின் உணர்ச்சியைப் பிரதிபலிக்கின்றன: "சோவியத் யூனியன் இந்தியாவின் நம்பகமான நண்பனாக இருந்தது, இருக்கிறது, இருந்து வரும்."

# சிவப்பு ரோஜாவைப் போல் செக்கச் செவேல்

**அந்த ஒளிவண்ணச் சிறப்பு, அந்தச் சிவப்பு,**
**அதே மலர்வனப்பு - அவ்வளவும் உமக்கென அடங்கியது**
**சிங்கார் குங்கும் பொட்டு - சிகப்பின் சிகரமான குங்கும்**

● உசிதமான பொருள்களைத் தேர்ந்தெடுத்து உரியவாறு கலவை செய்த பலன், வேறெந்தக் குங்குமமையும் விட அதிகச் சிவப்பையும் வண்ணச் சிறப்பையும் தருகிறது உங்களுக்கு. ● சிந்தை கவரும் வேறு பல சாயல்களிலும் கிடைக்கிறது சிங்கார்...பளிவான ரகம், பளிச்சிடும் ரகம், மற்றும் பவுடர்.

● நூற்றுக்கு 100 நம்பிக்கைக்குரியவை சிங்கார் குங்கும் பொட்டு ரகங்கள் எல்லாமே கறாரான தரக் கட்டுப்பாட்டுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டவை. ● ஒவ்வொரு சிங்கார் பேக்குக்கும் போலிகள் பல வந்துவிட்டன சந்தையிலே. எனவே, சிங்கார் என்ற பெயர் இருக்கிறதா என்று கவனித்து வாங்குக.




**சிங்கார்**

பாரத நாட்டின் உச்ச விற்பனையுடைய
ஒப்பிலாக் குங்கும திலகம்

பாரமவுண்ட் பிராடக்ட்ஸ்,
பிரசாத் சேம்பர்ஸ், பம்பாய் 400 004

everest/392/SP-tm


பாங்களா தேஷ்
பாக்
பாரதம்
சீனா


கரிகாலன் பதில்
முரசொலி
கறுப்புக் கையன் புதிர்!
முக உறவினரிடம் கணக்கில் வராத பணம்! வருமான வரி இலாகா அறிக்கை


வாசகம் எதுக்கு, வெங்காயம்! சிலை இருக்கே!
கடவுளை நம்புகிறவன் முட்டா
பக்தவத்சலம்

கல்கி

மலர் 35

இதழ் 49



தமிழ்த்திரு நாட்டைத் தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# கோட்டம் எழுப்பினர்; குறளை மறந்தனர்!

வள்ளுவருக்குக் கோட்டம் எழுப்பிக் குறட்பாக்களைக் கல்லிலே பதித்தவர்கள் வள்ளுவர் வாசகங்களைத் தங்கள் இதயங்களிலிருந்து அழித்தார்கள்.

வாய்மையே வெல்லும் என்று பகன்ற அரசுச் சின்னத்தின் கீழ் ஆட்சி செலுத்தியவர்கள் அந்தப் பேருண்மையை அலட்சியப் படுத்தினார்கள்.

அண்ணாவுக்குச் சமாதி எழுப்பியதுடன் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றுக்கும் சமாதி கட்டி விட்டார்கள், தங்கள் வாழ்க்கையைப் பொறுத்தமட்டில்.

இப்படித்தான் எண்ணத் தோன்றுகிறது, வருமான வரி இலாக்காவினரின் அறிக்கையைப் பார்க்கும்போது.

அந்த அறிக்கை அதிர்ச்சி அளிப்பது அல்ல. மக்கள் பரவலாகப் பல நாளேடுகள் மூலம் அவ்வப்போது அறிந்து பேசி வந்தவைதாம். அப்போதெல்லாம் வதந்திகளைப் பரப்புகிறார்களே என்று அலறியது முரசொலி. இன்று அதிகாரபூர்வமாகவே அறிக்கை வெளியாகியுள்ளது.

தி. மு. க. அரசு ஆட்சியிலிருந்தபோது பல நல்ல காரியங்களையும் செய்தது, மறுப்பதற்கில்லை. எந்தக் கட்சியும் ஆட்சியில் அமர்வது மக்களுக்குப் பல நல்ல பணிகளைப் புரியத்தான். ஆனால் தி. மு. க. ஆட்சி செய்த பல நற்பணிகள் கட்சித் தலைவர்கள் பலர் சொந்த லாபம் கருதி நடத்திய தில்லுமுல்லுகளுக்குத் திரை போடவே பயன்பட்டிருக்கின்றன.

கிட்டத்தட்ட 33 லட்ச ரூபாய்க்கு நூறு ரூபாய் நோட்டுக்கள் சில்லறையாக மாற்றப்பட்டன, திரு கருணாநிதியின் கட்டளையின் பேரில்.

அவரது இல்லங்கள், அவரது உறவினர்களின் இல்லங்கள் பல, பல லட்ச ரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டன.

திரு மாறன் ஏழு லட்ச ரூபாய் செலவில் மவுண்ட்ரோட்டில் கட்டடம் எழுப்பியுள்ளார். முரசொலி காரியாலயம் மூன்று லட்ச ரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டது.

இப்படியே பட்டியல் நீளுகிறது. தயாளு, தர்மாம்பாள், கபாலி, கந்தப்பன், ஆதித்தனார் என்று பல பெயர்கள் அறிக்கையில் இடம் பெறுகின்றன. எல்லாம் கணக்கில் வராத தொகைகள், வரி ஏய்ப்புக்கள், மோசடிகள்.

எல்லாவற்றையும் படிக்கும்போது வியப்பு ஏற்படவில்லை. லஞ்ச ஊழலைக் களையெடுப்பதற்குப் பதில் தமிழகமெங்கும் பயிராக்கியது தி.மு.க. ஆட்சி என்று அனுபவப்பட்ட நமக்குத் தெரியும்.

நமக்கு ஏற்படும் வியப்பு இது விஷயத்தில் மத்திய அரசின் பொறுமையைக் குறித்துத்தான்.

# எப்படித்தான் தூங்குகிறார்களோ!

சாம்பல் நிறமொரு குட்டி...கருஞ்
சாந்து நிறமொரு குட்டி,
பாம்பு நிறமொரு குட்டி – வெள்ளைப்
பாலின் நிறமொரு குட்டி.

எந்த நிறமிருந்தாலும் – அவை
யாவும் ஒரே தரமன்றோ ?
இந்த நிறம் சிறிதென்றும் – இஃ
தேற்ற மென்றுஞ் சொல்லலாமோ ?

என்று பாடினார் மகாகவி பாரதியார். அவருக்கு முன்னும் பின்னும் எத்தனையோ அகில உலக அறிஞர்கள் நிறவேற்றுமை பாராட்டு

வதன் அபத்தத் தன்மையை விளக்கியிருக்கிறார்கள். ஆயினும் தென் ஆப்பிரிக்க அரசைப் பொறுத்தமட்டில் எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காகவே இருந்து வந்திருக்கிறது.

நிற வேற்றுமை பாராட்டுவது மட்டுமல்ல பிரச்னை. ஆப்பிரிக்கக் குடிமக்கள் தங்கள் நாட்டிலேயே அந்நியரால் அடிமைக்கொட்பானவர்களாக நடத்தப்படும் இழிநிலையையும் காண்கிறோம்.

எதிர்ப்பு என்ற எண்ணமே ஆப்பிரிக்கக் குடிமகன் உள்ளத்தில் எழாதிருக்கத் தேவையான அத்தனை சட்டங்களையும் இயற்றியுள்ளான் தென் ஆப்பிரிக்க வெள்ளையன். இந்தச் சட்டங்கள் பயங்கரமானவை. இவற்றால் மரண தண்டனை பெற்றோர் ஏராளம் என்றால் மரண தண்டனையே தேவலாம் என்ற அளவில் சிறையில் வாடுவோர் அதைவிட அதிகம். இவ்வளவையும் மீறி ஆப்பிரிக்கக் குடிமகன் தன்னை ஆளும் வெள்ளையனுக்கு எதிராக அடிக்கடி புரட்சி செய்து வருகிறானே அது தான் ஆச்சரியம்.

சமீபத்தில் ஸோவெட்டோ எழுச்சியில் மாணவர்கள் பெருமளவில் பங்கேற்றனர். அடக்குமுறை கட்டவிழ்த்துவிடப்பட்டது. நூறு இளைஞர்கள் உயிர்த் தியாகம் புரிந்தனர். ஆயிரம் பேருக்கு மேல் விழுப்புண் அடைந்தனர். ஐ. நா.வின் பாதுகாப்பு சபை தென் ஆப்பிரிக்க அரசின் போக்கை வன்மையாகக் கண்டித்ததுடன் தன் கடமை தீர்ந்ததாக எண்ணி ஓய்ந்து விட்டது.

அதன் பின்னர் மறுபடியும் இளைஞர் மட்டுமின்றிப் பள்ளிச் சிறுவர் மீதும் துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருக்கிறது. இத்தனை இளம் உயிர்களைப் பலி வாங்கிவிட்டுத் தென் ஆப்பிரிக்கப் பிரதமரும் மற்றவர்களும் எப்படித் தான் நிம்மதியாகத் தூங்குகிறார்களோ !

தென் ஆப்பிரிக்காவில் இன்று வேகம் பெற்று வரும் எழுச்சி நிற வேற்றுமை பாராட்டுவதை எதிர்த்து நடக்கும் புரட்சி மட்டுமல்ல. அது சுதந்திர தாகம் மிகுதியானதன் விளைவு. ஆப்பிரிக்காவில் தங்களைச் சுற்றிலும் பல நாடுகள் சுதந்திரம் பெற்று ஆப்பிரிக்காவை ஆப்பிரிக்கரே ஆள்வதைக் காணும் தென் ஆப்பிரிக்கக் கறுப்பர்கள் தங்களை மட்டும் வெள்ளையர் ஆள்வதை எத்தனை காலம் சகிப்பர் ?

# 'சுஜாதா'வின் கதைகள்

## மாணவருக்கு ஒரு போட்டி

எதிர்காலத்தில் புலால் உண்போருக்கு மலிவு விலையில் போதிய அளவில் இறைச்சி கிடைக்காது என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர். இறைச்சி அபிவிருத்திக்கு மிருகங்களை வளர்த்துக் கொழுக்க வைப்பதைக் காட்டிலும் வேறு எளிய வழிகளைத் தேட வேண்டும். புலால் என்பது பெரும்பாலும் புரதச் சத்தே. ஒரு மிருகத்தை இரு மடங்கு கொழுக்க வைக்க ஆறு மாதங்களாகும். செயற்கைப் புரதச் சத்தை பாக்டீரியாக்களின் உதவியுடன் பத்தே நிமிஷங்களில் இரட்டிப்பாக்க முடியும். எனவே, எதிர்காலத்தில் மலிவான செயற்கை இறைச்சி மிகவும் பிரபலமடையும். அந்தக் கட்டத்தில் அசைவ உணவு அருந்துவோரே அதிகம் பேர் இருக்கமாட்டார்கள் !

இப்படி ஒன்றா இரண்டா ? எதிர்காலத்தில் எத்தனையோ விஞ்ஞான அற்புதங்கள் நிகழப் போகின்றன. அவற்றை இன்றே அகக் கண்ணால் பார்த்துக் கதை வடிவம் தந்து அழகிய நடையில் எழுதி மகிழ்விக்கிறான் கற்பனையாளன். விஞ்ஞானக் கதைகள் மலர்கின்றன. இன்று கதையாகத் தோன்றுபவை நாளைய நிகழ்ச்சிகளாகும், நேற்றைய விஞ்ஞானக் கதைகள் இன்று நிகழ்ச்சிகளானது போல. வெல்ஸ், வெர்ன், க்ளார்க் போன்றோர் இத்துறையில் முன்னோடிகள்.

தமிழில் விஞ்ஞானக் கதைகள் எழுதுவோர் அதிகம் பேர் இல்லை. விரல்விட்டு எண்ணி விடலாம், அதற்கும் ஒரு கரம் போதும். அவர்களிலும் முதலில் நினைவுக்கு வருபவர் சுஜாதா. இத்துறையில் இவர் அடைந்து வரும் ஆரம்ப வெற்றிகளுக்குக் காரணங்கள்: (1) இவரே ஒரு விஞ்ஞானி; (2) இலக்கிய ஆர்வத்துடன் தமிழ் ஆற்றலும் உண்டு ; (3) எழுத்துத் திறனுடன் கற்பனை வளமும் கொண்டவர்.

அவருக்கு மேலும் ஒரு சந்தர்ப்பம் அளித்து அவரது ஆரம்ப வெற்றிகளைப் பூரண வெற்றியாக்கி அதன் மூலம் கல்கிக்கும் புதுப் பெருமை சேர்த்துக் கொள்ள எண்ணினோம். விஞ்ஞானச் சிறுகதைகளைத் தொடர்ந்து எழுதி வரக் கோரினோம். மகிழ்ச்சியுடன் இசைந்தார்.

விஞ்ஞானக் கதைகள் — தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தவரை இன்னமும் ஒரு புதிய துறை. அரிய பெரிய சாதனைகளை நிகழ்த்த இடமளிக்கும் துறை. சுஜாதாவைப் பின்பற்றி இளம் தலைமுறையினரில் பலப் பலரும் விஞ்ஞானக் கதைகள், நாவல்கள் எழுதிப் புகழ் பெற வேண்டும் என்பது எங்கள் அவா.

அதற்கு அனுசரணையாகக் கல்லூரி மாணவர்களுக்கு ஒரு போட்டி : சுஜாதாவின் விஞ்ஞானச் சிறுகதைகளைக் கல்கியில் ஒன்று விடாமல் படித்து வாருங்கள். அதன்பின் அக்கதைகள் குறித்து உங்கள் மனத்தில் உருவாகும் உணர்ச்சிகளைக் கொட்டி ஒரு கட்டுரை எழுதுங்கள். திறனாய்வுக் கட்டுரையாக இருந்தால் சரி, ஆனால் திறனாய்வுக் கட்டுரையாகத் தான் இருக்க வேண்டுமென்பதுமில்லை. சுஜாதாவின் விஞ்ஞானக் கதைகள் உங்கள் உள்ளங்களில் என்ன பாதிப்புக்களை ஏற்படுத்தின, எழுச்சிகளைத் தோற்றுவித்தன, உணர்ச்சிகளைத் தூண்டின என்பனவற்றைத் தொகுத்து அழகிய கட்டுரை வடிவம் தந்தால் போதும். கூடிய வரையில் சுருக்கமாக எழுத முயலுங்கள். பிரசுரமாகும் கட்டுரைகளுக்குப் பரிசு உண்டு.

— ஆசிரியர்


அமரர் கல்கி எழுதிய
பார்த்திபன் கனவு
கல்கி
ஆகஸ்ட் 8 —
இதழில் ஆரம்பம்

# பாரத் ஓவர்ஸீஸ் பாங்கில் உங்கள் டிபாசிட்டுகளுக்கு அதிகப்படி வட்டி கிடைக்கிறது




சதவிகிதம் கூடுதலான வட்டி 5 வருடங்கள் வரையிலுள்ள டெர்ம் டிபாஸிட்டுகளுக்கு




சதவிகிதம் கூடுதலான வட்டி சேமிப்பு கணக்குகளுக்கு

கீழ்கண்ட அட்டவணையை கவனமாகப் படியுங்கள்:

| | | | |
|---|---|---|---|
| சேமிப்புக் கணக்குகள் | 5¼% | 6 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 6¼% |
| டெர்ம் டிபாஸிட்டுகள் | | 9 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 1 வருடத்துக்கு குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 7¼% |
| 14 நாட்கள் வரை | வட்டி இல்லை | 1 வருடம், மற்றும் அதற்கு மேல் ஆனால் 3 வருடத்துக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 8¼% |
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¼% | 3 வருடம் மற்றும் அதற்கு மேல் ஆனால் 5 வருடம் (உட்பட) வரையான காலத்துக்குரிய டிபாஸிட்டுகளுக்கு | 9¼% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3½% | 5 வருடங்களுக்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு | 10% |
| 91 நாட்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 6 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 5½% | | |

ரெகெரிங் டிபாசிட்டுகளுக்கும் தக்கபடி அதிக வட்டி அளிக்கின்றன.

எங்கள் பாங்குக்கு விஜயம் செய்யுங்கள் —
எங்களது அன்பார்ந்த சேவை உங்களுக்கு திருப்தி அளிக்கும்.




## பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: "ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்", மவுண்ட் ரோடு, சென்னை-600006

**கிளைகள்:**

சென்னை (4), பம்பாய் (2), புது டெல்லி (2), கல்கத்தா (2), பெங்களூர், ஹைதராபாத், அஹமதாபாத், ஜலந்தர், விசாகப்பட்டிணம் மற்றும் பாங்காக் (தாய்லாந்து)



# ஜீவகாருண்யம் ௰

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்....

'சூலத்தில் சோற்றை இட்டுக் கையைப் பிடித்து இழுப்பது' என்பார்களே, அந்த மாதிரியான ஸந்தர்ப்பம். உஞ்சவிருத்திக் குடும்பத்துக்காரர்கள் ஆளுக்கு ஏதோ ஒரு பிடி மாவைத் தின்று அந்த வேளைக்குப் பிராணனை ரக்ஷித்துக் கொள்ளப் பார்த்த சமயம் அதிதி வந்து சேர்ந்துவிட்டார்.

அந்த ஸந்தர்ப்பத்திலும்கூட அந்தக் குடும்பத்தில் ஒருத்தராவது விருந்தோம்பல் பண்பில் பின்வாங்கவில்லை. பிராமணன், அவனுடைய பத்தினி, புத்திரன், மாட்டுப் பெண் ஆகிய நாலு பேருமே போட்டி போட்டுக் கொண்டு அதிதிக்குத் தங்கள் பங்கு மாவைக் கொடுக்க முன் வந்தார்கள்.

அதிதி ஸத்காரம் — அல்லது விருந்தோம்பல் — என்பது சமூக தர்மம். Social Duty. குடும்ப தர்மம், Domestic duty, என்றும் ஒன்று இருக்கிறது. ஒரு குடும்பத்தில் இன்னின்னார் இன்னின்ன கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று நிர்ணயிக்கிற தர்மம் இது. நாலு பேருமாக ஸோஷல் ட்யூட்டியைப் பண்ண முன்வருகிற போதே தங்களுக்குள் டொமெஸ்டிக் ட்யூடியை எடுத்துக் காட்டிக் கொண்டார்கள். 'புருஷன் இல்லாமல் ஒரு பத்தினி இருப்பாளா? உங்கள் பங்கைக் கொடுத்து விட்டு நீங்கள் உயிர்விட நான் பார்ப்பேனா? அதனால் என் பங்கை நான் தருகிறேன்' என்று பத்தினி பிடிவாதம் பிடித்தாள். பிள்ளையோ, 'பிரத்தியக்ஷ தெய்வமான மாதா பிதாக்களுக்குப் பிராணபத்து என்கிறபோது ஒரு புத்திரன் அதைப் பார்த்துக் கொண்டிருக்கலாமா?' என்று அவர்களைத் தடுத்து, அதிதிக்குத் தன் பங்கையே தரப் போனான். உஞ்சவிருத்தி பிராமணனிடம் அவனுடைய பத்தினி எந்தப் பதிவிரதா தர்மத்தை எடுத்துச் சொன்னாளோ, அதையே மாட்டுப் பெண் பிள்ளையிடம் சொல்லி, ''நான்தான் என் பங்கைத் தருவேன்'' என்று பிடிவாதம் பண்ணினாள்.

நாமாக இருந்தால் ஏதாவது ஒரு வஸ்து நமக்குக் கிடைக்கிறதென்றால், 'நான் முந்தி, நீ பிந்தி' என்று போட்டி போடுவோம். இந்த ஏழைப் பிராமணக் குடும்பத்திலோ பிராணத் தியாகத்துக்குப் போட்டி போட்டார்கள். தியாகம், தானம் எல்லாம் பணக்காரர்களால்தான் முடியும் என்றில்லை; பரம ஏழைகளாலும் முடியும். பெரிய ராஜாவான ரந்தி தேவன் குடும்பத்தினர் செய்த அதே தியாகத்தைத்தான் இப்போது பரம தரித்திரர்களான இவர்களும் செய்கிறார்கள்.

கடைசியில் பிராமணன் மற்றவர்களை அடக்கிவிட்டு, ''குடும்பத் தலைவன் என்று பேர் வைத்துக் கொண்டிருக்கிற என் பொறுப்பு, கடமை உங்கள் மூவரையும் ரக்ஷிப்பது. மனமறிந்து உங்களில் எவரையும் பட்டினி போட்டு வதைக்கு ஆளாக்கினால் நான் பிரஷ்டனாகிவிடுவேன்'' என்று தீர்மானமாகச் சொல்லித் தன் பங்கு மாவை யாசகருக்கு அன்போடு தானம் செய்தான்.

அவர் அதைச் சாப்பிட்டுவிட்டுப் பசி தீரவில்லை என்றார்.

உடனே பத்தினி தன் பங்கை அவருக்கு மகிழ்ச்சியோடு கொடுத்தாள்.

அதையும் சாப்பிட்டுவிட்டு, 'இன்னமும் கொண்டா' என்று உட்கார்ந்துவிட்டார் அதிதி.

கொஞ்சம்கூடக் கோபமே இல்லாமல் பிள்ளையும் தன் பங்கு மாவை அவருக்குக் கொடுத்தான்.

அதையும் ஏப்பம் விட்டுவிட்டு, இன்னம் வந்தாலும் தள்ளுபடி இல்லை என்கிற மாதிரி இருந்தார் அதிதி.

கடைசியில் மாட்டுப் பெண்ணும் அவருக்கு மனஸாரத் தன் பங்கு மாவைக் கொடுத்தாள்.

அதிதி அதைச் சாப்பிட்டு முடித்தாரோ இல்லையோ, ஆளைக் காணவில்லை. அந்த நாலு பேர் மேலே ஆகாசத்திலிருந்து புஷ்ப வ்ருஷ்டி பொழிந்தது.

''நான்தான் தர்ம தேவதை. உங்களைப் பரிசோதிக்கவே யாசகப் பிராமணனாக வந்தேன். பரீக்ஷையில் நீங்கள் அற்புதமாக

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

ஜயித்து விட்டீர்கள். உயிரைக் கொடுத்தாவது விருந்தோம்பலை நடத்திக் காட்டுவதில் உங்கள் குடும்பத்தைப் போல் எங்குமே கண்டதில்லை. அவரவரும் கொடுத்த பிடி மாவு உங்களுக்கு ஸ்வர்க்கத்திலேயே இடம் தேடிக் கொடுத்து விட்டது. எல்லோரும் ஆனந்த மயமான தேவலோகத்துக்கு வந்து சேர்வீர்களாக'' என்று அசரீரி கேட்டது.

(அசரீரி கேட்டதா; தர்மதேவதை நேரில் வந்ததா என்று சரியாக நினைவில்லை. தாத்பரியம் இதுதான்.)

உடனே தேவர்கள் அங்கே அலங்கார விமானத்தோடு வந்தார்கள். உஞ்சவிருத்தி பிராமணக் குடும்பத்தினர் அதிலே ஏறிக் கொண்டு ஸ்வர்க்கத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

ஸ்வர்க்கத்துக்குப் போனார்கள் என்றால் இந்த லோகத்தில் பிராணனை விட்டார்கள் என்று அர்த்தம். குசேலர் மாதிரி இந்த லோகத்திலேயே அவர்களுக்கு ஸகல ஸம்பத்தும் வந்ததாகச் சொல்லவில்லை அல்லவா? இவர்கள் ஸ்வர்க்க வாஸம் கிட்டும் என்று அபேக்ஷித்து, தானம் செய்யவில்லை. விருந்தோம்பல் பண்புக்காகவே உயிரை விட்டார்கள். தானாக ஸ்வர்க்கம் ஸித்தித்தது.

இந்தக் கதையை எல்லாம் சொன்ன கீரிப் பிள்ளை, ''அந்த சமயத்தில் நான் குருக்ஷேத்திரத்தில் அந்த வீட்டில்தான் இருந்தேன். இவர்கள் தானம் கொடுத்த மாவு ஏதோ துளித்துளி கீழே சிந்தியிருந்தது. நான் அந்த இடத்துக்கு மேலாக ஓடுகிற போது, என் சரீரத்தின் இந்தப் பாதியில் அந்த மாவு பட்டதினால்தான் இந்தப் பக்கமே ஸ்வர்ண வர்ணமாகி விட்டது.

(இப்போது கூட ரொம்ப நல்லவர்களைத் 'தங்கமான மனசு' என்றுதான் சொல்கிறோம். இங்கிலீஷில் கூட 'Golden hearted' என்கிறார்கள் அல்லவா? தங்க மனசு படைத்த தியாகக் குடும்பம் செய்த தானத்தில் இது ஸ்தூலமாகவே நிஜமாயிருக்கிறது.)

''அதற்கப்புறம், இப்படி ஒரு பக்கம் மட்டும் தங்கமாக இருக்கிறதே, இதே மாதிரி வேறெங்காவது பரம உத்கிருஷ்டமான தானம் நடக்கிற இடத்தில் சிந்திப் போனது இன்னொரு பக்கத்தில் பட்டால் அதுவும் தங்கமாகி, முழுக்கத் தங்கமாகலாமே என்கிற ஆசையில் நானும் பெரிய பெரிய ஸந்தர்ப் பணைகள், அன்ன சாலைகளுக்கெல்லாம் போனபடிதான் இருக்கிறேன். ஆனால் என் மறு பாதி தங்கமாக மாறவேயில்லை. தர்மபுத்திரர் மகா பெரிய யாகம் பண்ணி, அன்ன தானம் செய்கிறாரே, இங்கே சிந்திப் போனதிலாவது என் சரீரத்தின் பாக்கி பாதி தங்கமாகுமாக்கும் என்றுதான் இங்கும் வந்து புரண்டு பார்த்தேன். இங்கேயும் பலனைக் காணோம்'' என்று கீரிப் பிள்ளை முடித்தது.

(தொடரும்)

# பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் வழங்கும் தீஞ்சுவையுள்ள 'திடீர்த் தயாரிப்பு.'



## கஸ்டர்டு டிலைட்

ஒவ்வொரு நாளும் உங்கள் குழந்தைகளுக்கு பாலின் நற்பண்புகளை வழங்க ஒரு சுவையான வழி. 4 மேசைக்கரண்டி **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடருடன் சிறிது குளிர்ந்த பாலைக் கலந்து கொள்ளுங்கள். அதைக் கூழ்போல் கிளறுங்கள். பின்னர் ½ லிட்டர் பாலை சூடாக்கி, அதில் கஸ்டர்டு பவுடர் கலவையையும் 4 மேசைக்கரண்டி சர்க்கரையையும் கலந்து கொள்ளுங்கள். கலவை கெட்டியாகும் வரை கிளறுங்கள். பிறகு அதை சிறிது நெய் தடவிய தட்டில் ஊற்றுங்கள். படியும் வரை குளிரவிடுங்கள். பாதாம் பருப்பால் அலங்கரியுங்கள்.

அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு பக்குவப்படுத்தப்பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச் **சிறந்தது பிரவுன் & போல்ஸன்.**




கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரை. லிட்.
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். சோமானி மார்க், பம்பாய் 400 001.

OBM 5470 TM



# அரும்பு அம்புகள்

அமரர் கல்கி

### அத்தியாயம் 23

## கமலாவின் கள்ளம்!

சொட்டச் சொட்ட நனைந்திருந்த கமலா 'வெட வெட' வென்று நடுங்கிக்கொண்டிருந்தாள். குளிரினால் அல்ல; அது கோடை காலம்தான். பயத்தினால் அல்ல; அவளுக்கு நீந்தத் தெரியும். மேலும் கிணற்றில் மூழ்க வேண்டும் என்று நினைத்தாலும் முடியாது! அதிகமாக அதில் ஜலம் இல்லை. கிணற்றின் சுவரில் குடம் அடிபட்டுக் குடம் நசுங்கிப் போயிருந்தது. அதைக் கண்டு காமாட்சி அம்மாள் கூச்சல் போடத்தான் போகிறாள். ஆனால் கமலா நடுங்கியது அதற்காகவுமல்ல.

அப்படியானால் அவள் மேனியெல்லாம் குடு குடுப்பாண்டியின் கை உடுக்கை போல் மாறியதற்குக் காரணம் என்ன?

கல்யாணம் அவளைக் காப்பாற்றிக் கரை சேர்த்திருந்ததுதான்!

''ஐயோ!'' என்று கமலாவின் குரல் கேட்ட மறு கணம் அவன் ஓடோடி வந்து கிணற்றுக்குள் இறங்கினான். ''பயப்படாதே'' என்று சொல்லி அவளைப் பற்றித் தூக்கி விட்டான். கிணற்றுப் படிகளைப் பிடித்துக் கொண்டு அவள் மேலே ஏறிவர உதவினான். இருவரும் வெளியே வந்த பிறகு தாம்புக் கயிற்றைச் சரிசெய்து குடத்தையும் இழுத்து வெளியே கொணர்ந்தான்.

'ஆபத்துக்குப் பாபமில்லை' என்ற கருத்தில் கல்யாணம் சற்றும் தாமதியாமல் கமலா கரையேற உதவியபோது அவன் கரங்கள் அவள் தேகத்தைத் தீண்டிய இடங்கள் இப்போதும் அவளுக்கு இன்ப வாதிரியை அளித்துக் கொண்டிருந்தன. அந்த இன்ப வேதனையே குற்ற உணர்வுடன் கூடிய பயமாகவும் மாறி அவளை உலுக்கி எடுத்தது.

தனக்கு நீந்தத் தெரியும் என்று அவள் ஏன் கூறவில்லை? தான் பயப்படவில்லை என்று அவள் ஏன் காட்டிக் கொள்ளவில்லை? கிணற்றுப் படிகளில் கால் வைத்துத் தன்னால் அவன் உதவி இன்றியே கரையேறிவிட முடியும் என்று அவள் ஏன் அவனுக்கு உணர்த்தவில்லை?

அவன் வந்து தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள். அதற்கேற்ப நடித்தாள். அவன் தன்னைத் தொட்டுத் தூக்க அனுமதித்தாள்.

ஆண் கரம் ஒன்று அவள் மீது படுவது இதுவே முதல் முறை. தான் அவனை மனமாரக் காதலிப்பது போலவே அவனும் தன்மீது அன்பு கொண்டிருந்தால் அவள் கவலைப்பட்டிருக்க மாட்டாள். இப்படி நடுங்கிப் பதறவும் நேர்ந்திருக்காது. கரையேறிய பிறகு அவனை ஏமாற்றி விட்டதாகக் கூறிச் சிரித்திருப்பாள். ஆனால் கல்யாணத்துக்குப் பவானியின் மீது இருந்த மோகம் அவளுக்கு நன்றாகத் தெரியும். அவன் தன்னைக் காப்பாற்றியது ஓர் உயிர் மற்றோர் மனித உயிரிடம் காண்பிக்கும் இயல்பான இரக்க உணர்வின் அடிப்படையில்தான். ஆனால் அவளோ அவனது ஸ்பரிசத்தை விரும்பிக் கள்ளத்தனமான முறையில் அதைப் பெற்றும் இருந்தாள். இந்தக் குற்ற உணர்வு காரணமாகத்தான் அவள் இப்போது நடுங்கிக் கொண்டிருந்தாள்!

கோயிலுக்குப் போயிருந்த காமாட்சி அம்மாளும் மாசிலாமணியும் திரும்பி வந்து சேர்ந்தார்கள்.

''கொல்லைப்புறம் ஏதோ சத்தம் கேட்கிறதே!'' என்று சொல்லிக் கொண்டே காமாட்சி கிணற்றடிக்கு நடந்தாள்.

கமலா வெடவெடத்து நிற்பதோ கல்யாணம் ஈரம் சொட்ட நிற்பதோ அவள் கண்ணில் படவில்லை. முதலில் குடம்தான் அவள் கவனத்தைக் கவர்ந்தது!

''அடி பாவி! குடியைக் கெடுத்தியே! வேணுமென்றே நகக்கினாயா? படிப்புத்தான் வரலே, வீட்டு வேலைகளையாவது உருப்படியாகச் செய்வாய் என்று பார்த்தால் அதிலும் பூஜ்யம்தானா?'' என்றாள். கமலா அழ ஆரம்பித்தாள்.

கல்யாணத்துக்குக் கோபம் கோபமாக வந்தது. பற்களை நறநறவென்று கடித்தான்.

இதற்குள் மாசிலாமணி, ''இந்தா என்ன நடந்ததென்று விசாரியாமலேயே எதற்கு இப்படி எரிந்துவிழுகிறாய்?'' என்று கேட்டார். ''கமலா ஏன் உன் உடம்பு நனைந்திருக்கிறது? எப்படிக் குடம் நசுங்கியது?'' என்றார்.

''கிணற்றிலே விழுந்துவிட்டேன் அப்பா!''

''ஐயய்யோ! கிணற்றிலே விழுந்து விட்டாயா?'' என்று அலறினாள் காமாட்சி. '' 'காலாகாலத்தில் கல்யாணம் செய்து கொடுக்காமல் பெண்ணை வீட்டிலே வைத்துக்கொண்டிருந்தார்கள். அவள் வாழ்க்கை வெறுத்துக் கிணற்றிலே விழுந்தாள்' என்று எங்களுக்குக் கெட்ட பெயர் வாங்கித் தரத் திட்டம் போட்டாயா? நீயாகவே வந்து விழுந்து விட்டாயா?''

''இல்லை! அவளாக விழவில்லை; நான்தான் பிடித்துத் தள்ளினேன்!'' என்றான் கல்யாணம் ஆத்திரத்துடன்.

''இது என்ன அநியாயம்?'' என்று தம்பதியர் இருவரும் ஏககாலத்தில் கேட்டனர்.

''இவர் விளையாட்டுக்கு அப்படிச் சொல்கிறார் அப்பா! இவர்தான் என்னைக் கிணற்றிலிருந்து கரையேற்றிக் காப்பாற்றினார்'' என்றாள் கமலா.

கல்யாணம் நடந்த கதையை விவரித்தான். எல்லாவற்றையும் கேட்டுவிட்டுக் காமாட்சி அம்மாள், ''நல்லவேளை சரியான சமயத்தில் வந்து காப்பாற்றினாய். இல்லாதபோனால் எப்பேர்பட்ட அபாண்டமெல்லாம் எங்கள் மேல் ஊரார் சுமத்தி விருப்பார்களோ! இவளுக்குக் கல்யாணமாகாததால் மனக் கசப்படைந்து நானே இவளைக் கிணற்றில் பிடித்துத் தள்ளிவிட்டதாகக்கூடக் கதை கட்டி விடுவார்கள்'' என்றாள்.

'பெண் கிணற்றில் விழுந்து சாகாமல் பிழைத்தது பெரிதாகப் படவில்லை. தன் மீது அபவாதம் விழாமல் தப்பியதுதான் முக்கியமாகத் தோன்றுகிறது இந்த அம்மாளுக்கு!' — கல்யாணத்துக்குக் காமாட்சியின் பேச்சு வியப்பளித்தது; கமலாவின் மீது அவனுக்குப் பரிவு அதிகரித்தது.

இந்தச் சமயம் வீட்டுக்கார ரங்கநாத முதலியார் வந்து சேர்ந்தார். வரும்போதே, ''இரண்டு மாத வாடகை பாக்கி. கொடுக்க முடியவில்லை என்றால் வீட்டைக் காலி பண்ண வேண்டியதுதான்'' என்று கூறியபடியே வந்தார்.

''நல்ல ஆளய்யா நீர்! கூரை பற்றியெரியும் போது பீடிக்கு நெருப்புக் கேட்ட கதையாக இருக்கிறது உமது போக்கு'' என்றான் கல்யாணம்.

''கூரை எரிகிறதோ இல்லையோ என் வயிறு பற்றித் திகுதிகுவென்று எரிகிறது. கல்யாணம்! உன் பேச்சைக் கேட்டு இவர்களை இங்கே குடி வைத்தேன் பார்!''

''முதலியார் ஸார்! நிலைமையைப் புரிந்து கொள்ளாமல் பேசுகிறீர்கள். இந்த மனுஷனுக்கு ஒரு வாரமாக உடம்பு சரியில்லை. வேலை கிடைத்தும் கூடப் போக முடியவில்லை. இந்தப் பெண்ணோ கிணற்றில் விழுந்து விட்டாள்.''

''ஐயையோ! ஏன்! ஏன்?''

''உங்களால்தான்!''

''இது என்ன வீண் பழி? நான் இந்த வீட்டுக்கு வந்தே ரொம்ப நாளாயிற்றே. இரண்டு மாசத்துக்குப் பிறகு இன்றுதானே வருகிறேன். வாடகையைக் கொடுத்து அனுப்பியிருந்தால் இப்போதுகூட வந்திருக்க மாட்டேனே!''



''அதுதான் நீங்கள் செய்த தவறு'' என்றான் கல்யாணம். ''ஏதடா, அயலூரிலிருந்து வந்தவர்கள் வந்து நம் வீட்டில் தங்கியிருக்கிறார்களே, அடிக்கடி வந்து பார்த்துக் கவனித்துக் கொள்வோம் என்று தோன்றுதோ ஒரு மனுஷனுக்கு?''

''நீதான் கவனித்துக் கொள்கிறாயே என்று இருந்து விட்டேன்.''

''அதன் விளைவைப் பாருங்கள். பாவம், இவன் கிணற்றில் விழ நேர்ந்தது!''

''அதெப்படி நான் இங்கு வராததற்கும் இவள் கிணற்றில் விழுதற்கும் என்ன சம்பந்தம்?''

''நீங்கள் அடிக்கடி வந்து பார்த்திருந்தால் தண்ணீர் இழுக்க இவள் படும் சிரமத்தை உணர்ந்திருப்பீர்கள். ஒரு பம்பு செட் வைத்துக் கொடுத்திருப்பீர்கள். குழாயைத் திறந்தால் ஜலம் வந்திருக்கும். இவள் கிணற்றில் நீர் இழுக்கப் போயிருக்க மாட்டாள். கிணற்றுக்குள் விழுந்திருக்கவும் மாட்டாள்!''

''வாஸ்தவம்தான். நாளைக்கே நான் ஏற்பாடு பண்ணி விடுகிறேன்'' என்ற ரங்கநாதன் கமலாவைக் கனிவு ததும்பப் பார்த்தார்.

''பாவம்! கமலா ஈரத்தோடு நிற்கிறாளே! உடம்பு வெட வெடவென்று நடுங்குகிறதே. போம்மா, போ! உள்ளே போய் வேறு புடவை மாற்றிக்கொள்'' என்றார்.

கல்யாணம் ரங்கநாத முதலியாரை அணுகி அவர் காதோடு பேசினான்: ''வேறு மாற்றுப் புடவை இருக்கோ என்னமோ யார் கண்டது? இந்தச் சமயத்தில் நீர் வாடகையை வசூல் பண்ணுகிறேன் என்று வேறு வந்துவிட்டீர்.''

ரங்கநாத முதலியார் உடனே மாசிலாமணியைப் பார்த்து, ''பாவம், உங்கள்




நிலைமையை யோசித்தாலும் பரிதாபமாகத்தான் இருக்கிறது. இன்னும் ஒரு மாசம் தவணை தருகிறேன். அதற்குள் மூன்று மாத வாடகையையும் சேர்த்துக் கொடுத்து விடுங்கள்!'' என்றார்.

''அதற்கென்ன கூட இரண்டு மாச அட்வான்ஸும் சேர்த்துத் தருகிறேன்'' என்றார் மாசிலாமணி தைரியம் அடைந்தவராக.

கல்யாணம் அந்தக் குடும்பத்துக்கு அடுத்தடுத்து மூன்று உதவிகளைச் செய்துவிட்ட




தலைசிறந்த ஆட்டக்காரர்கள் ஆட்ட வேகத்தில் ஒருவருக்கொருவர் உணர்ச்சி வசப்பட்டுத் தாக்கிக் கொள்ள முற்படும்போது வண்ணக் கார்டுகள் நடுவரின் திருக்கரத்திலிருந்து வெளிப்படும். உக்ரமாகத் தாக்கிக்கொள்ளவிருக்கும் ஹாக்கி ஆட்டக்காரர்கள் இதைக் கண்டதும் பெட்டிப் பாம்பாக ஒடுங்கி விடுவார்கள். பச்சை வண்ணக் கார்டு ஆட்டக்காரருக்கு எச்சரிக்கை செய்வதோடு நிறுத்திக் கொள்ளும். மஞ்சள் கார்டு பத்து நிமிஷம் உணர்ச்சி வசப்பட்ட ஆட்டக்காரரை மைதான எல்லைக்கு வெளியே நிறுத்தி வைத்து அவர்கள் சூட்டைத் தணிக்கும். சிவப்புக் கார்டு தலை தூக்குவது ரொம்ப அபூர்வம். அது தலை தூக்கி விட்டால் அன்றைய ஆட்டம் முழுமையிலிருந்தும் ஆட்டக்காரர் விலகியிருக்க வேண்டியதுதான்!

சென்னை முருகப்பா ஹாக்கி பந்தயத்தில் 'பச்சை, மஞ்சள்' வர்ணக் கார்டுகளைக் கொண்டே நடுவர்கள் சமாளித்து ஆட்டத்தைக் குந்தகமின்றி முடித்து வைத்தார்கள். இறுதி ஆட்டத்தில் பீகார் சீக்கிய ரெஜிமெண்டல் சென்டர் முருகப்பா தங்கக் கோப்பையைத் தட்டிக் கொண்டு போயிற்று. 'சிம்னி' அடித்த கிளாஸிகல் 'கோல்' ஹாக்கி ரஸிகர்கள் என்றும் மறக்க இயலாதது! அந்தச் சாதனைக்காகவே அவருக்குத் 'தலை சிறந்த ஆட்டக்காரர்' என்ற விருது வழங்கிக் கௌரவித்தார்களோ என்னவோ?

இப்பொழுது வெங்கட் கூட எம். ஸி. ஸி. யில் ஹாக்கி விளையாடத் தொடங்கி விட்டார் என்றால் ஹாக்கி மோகம் எப்படிப்பட்டது, என்பதை அறியலாம்.

—குண்டுமணி

படம் :

**அருணாசலம் கோப்பைக்காகப் பெண்கள் ஹாக்கிப் போட்டியில் பம்பாய் கோஷ்டியும் கேரளக் கோஷ்டியும் ஆடியதில் பம்பாய்க் குழுவுக்கு வெற்றி கிட்டியது.**

---

திருப்தியுடன் புறப்பட்டான். கமலாவைக் காப்பாற்றியாகி விட்டது; பம்பு செட்டுக்கு ஏற்பாடு செய்தாகி விட்டது; வாடகை கொடுக்க ஒரு மாச அவகாசம் பெற்றுத் தந்தாகி விட்டது! ''நான் வருகிறேன்; வீட்டுக்குப் போய் உடை மாற்றிக் கொள்ள வேண்டும்'' என்று கூறிப் பிரிந்தான்.

## அத்தியாயம் 24

# “வேறு நல்ல வரன்!”

கல்யாணம் சென்றபிறகு ரங்கநாத முதலியார் மாசிலாமணியைப் பார்த்து, ''ஏன் சுவாமி, அந்தப் பிள்ளையாண்டான் சொல்லி விட்டுப் போவது உண்மைதானா? உங்களுக்கு வேலை கிடைத்து விட்டதா?'' என்றார்.

''உம்... உம்... ஐம்பது சதம் கிடைத்த மாதிரிதான்.''

''அதென்ன ஓய், வாத்தியார் மாதிரி மார்க்குப் போட்டுப் பேசறீர்?''

''வாத்தியார் வேலைக்குத்தான் மனுப் போட்டேன். மனுப் போட்டதில் ஐம்பது சதவீத வேலை முடிந்தது. அவர்கள் என்னைத் தேர்ந்தெடுக்க வேண்டிய ஐம்பது சதவீத வேலைதான் பாக்கி. ஆக ஐம்பது சதவீதம் வேலை கிடைத்த மாதிரிதானே?''

ரங்கநாத முதலியார் சிரித்தார்.

''இப்படிச் சிரித்து எரிச்சலைக் கிளப்புவதற்குப் பதில் பிரார்த்தனை செய்து என் மனசைக் குளிர்விக்கலாம்'' என்றார் மாசிலாமணி. ''இந்த ஊர்ப் பள்ளிக்கூட நிர்வாகக் கமிட்டியில் நீரும் அங்கத்தினராமே?''

''ஆகட்டும் சுவாமி, ஆகட்டும்! பேஷாகப் பிரார்த்தனை செய்கிறேன். ஆனால் பலன் இருக்குமென்று தோன்றவில்லை. சின்னப் பசங்க எத்தனையோ பேர் பி.ஏ., பி.டி., எல்லாம் பாஸ் பண்ணிட்டு மனுப் போட்டிருக்காங்க. உபாத்தியாயர் பயிற்சி பெறாத உமக்கு அதுவும் இந்த வயதில் எப்படி வேலை கிடைக்கும்? என்னைக் கேட்டால் உங்கள் கஷ்டமெல்லாம் தீர ஒரு வழி சொல்வேன்...''

''பேஷாய்ச் சொல்லுங்கள். குருடனுக்கு வேண்டியது கண்தானே, அதை யார் கொடுத்தால் என்ன?''

''ஏதோ கடவுள் உங்களுக்கு மூக்கும் முழியுமாகப் பார்க்க லட்சணமாக ஒரு பெண்ணைக் கொடுத்திருக்கிறார். அவளுக்குக் கூடிய சீக்கிரம் ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்து விட்டால்... அதுவும் நல்ல பணக்கார இடமாகப் பார்த்து விட்டால்...''

''அதைப் பற்றி நாங்க யோசிக்காமலா இருப்போம்? இப்போ வந்துவிட்டுப் போறானே கல்யாணம் அவனுக்குக் கொடுக்கலாம் என்றுகூட எண்ணியிருந்தோம்.''

''அழகுதான், கல்யாணமாவது கமலாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளவாவது!''

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? அந்தப் பையன் இவளிடமும் எங்களிடமும் பிரியமாகத்தானே இருக்கிறான்? இவளும்...''

''தயவுசெய்து அந்தப் பேச்சையே இனி மேல் எடுக்காதீர்கள். ஏற்கனவே ஊரெல்லாம் ஒரே வதந்தியாக இருக்கு...''

''என்ன வதந்தி?''

''ஒரு வாலிபன் அடிக்கடி ஒரு யுவதியை வந்து பார்த்துக் கொண்டிருந்தால் என்ன

# உயர்தரமான சுவைக்கும் உண்மையான சிக்கனத்திற்கும்

## ரிக்கரி
இன்ஸ்டன்ட்




## அரை டீஸ்பூன் அளவே போதும்

(தேவைக்கேற்ப குறைத்தோ அதிகமாகவோ உபயோகிக்கவும்)




50 கிராம் சீசாவில் 37 கோப்பைகள்
மற்றெந்த 50 கிராம் சீசாவை காட்டிலும் 7 கோப்பைகள் அதிகமாக ரிக்கரி அளிக்கிறது. ஏனெனில் ரிக்கரி ஸ்டிராங்கானது. இது சிக்கனத்திற்கு ஒரு சிறந்தவழி.

அதிக ஸ்டிராங்கானது,
அதிக மணமுள்ளதும்கூட:
ருசியும், மணமும் மிகுந்த ஸ்டிராங்கான தயாரிப்பு. ஆகவே, ஒரு கோப்பை மணமும் ருசியும் மிக்க நல்ல காப்பிக்கு குறைந்த அளவு ரிக்கரியே போதும்.



இப்போது ரிக்கரியின் விலை கணிசமாகக் குறைவு!

50 கிராம் சீசாவுக்கு 50 பைசே விலை குறைக்கப்பட்டுள்ளது.

## ரிக்கரி
இன்ஸ்டன்ட்

வறுத்து அரைத்த காப்பியின் சுவையை ஏறக்குறைய அதே விலையில் உங்களுக்கு அளிக்கிறது.

HRCM-27-75 TAM

வதந்தி பரவும்? எல்லாம் காதல், கல்யாணம் என்கிற வதந்திதான்.''

''அப்போ நாங்க போட்ட கணக்குச் சரிதானே!''

''சுத்தத் தப்பு! அவன் ஒரு நாளும் கமலாவைக் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை. என்னைக் கேட்டால் அவனை மறுபடியும் உங்கள் வீட்டில் அடியெடுத்து வைக்கவே அனுமதிக்கக் கூடாது என்பேன்!''

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? இங்கே ஒரு தப்பும் நடந்துவிடவில்லை. நடப்பதற்கு நாங்கள் விடவும் மாட்டோம். நாங்கள் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.''

''அது தெரிந்துதான் நானும் சொல்கிறேன். இந்தக் கல்யாண சுந்தரம் இருக்கிறானே, சுத்தக் காலிப்பயல்! பவானி என்று ஒரு பெண் வக்கீல் வந்திருக்கிறாளே; எப்போது பார்த்தாலும் அவள் பின்னாலேயே சுற்றுகிறான். அவள் காலாலே இட்டதைத் தலையால் செய்யக் காத்திருக்கிறான். சீக்கிரம் அவர்கள் இரண்டு பேருக்கும் கல்யாணம் நடந்தாலும் நடக்கும் என்று ஊரிலே பேசிக் கொண்டிருக்கிறார்கள்...''

''பார்த்தீர்களா! நான் சொன்னது சரியாய்ப் போயிற்று!'' என்று காமாட்சி அம்மாள் தன் புருஷனிடம் சொன்னாள்.

''நாளைக்கு சர்ச்சில் ஜெயிக்கட்டும்; ஜப்பானும் ஜெர்மனியும் தோற்கட்டும். அல்லது பிரளயம் வந்து உலகமே அழிந்து போகட்டும். அப்போதும் நீ, 'பார்த்தீர்களா, நான் சொன்னது சரியாப் போயிற்று?' என்பாய். நீ சொல்லாத விஷயமே கிடையாது; அது சரியாகப் போகாத நிலைமையும் இல்லை'' என்றார் மாசிலாமணி. பிறகு ரங்கநாத முதலியாரை நோக்கி, ''உங்கள் யோசனைதான் என்ன?'' என்று கேட்டார்.

''வேறு நல்ல வரனாகப் பார்த்துக் கமலாவுக்குக் கல்யாணம் பண்ணிவிட வேண்டியதுதான்.''

''நீங்களே பார்த்து இந்தப் பெண்ணுக்கு ஒரு வழி காட்டி விடுங்களேன். உங்களுக்கு புண்ணியமாயிருக்கும்'' என்றாள் காமாட்சி.

''அதற்கென்ன பண்ணி விட்டால் போகிறது. நாளைக்கே நல்ல நாள்தான். ராகுகாலம் கழித்து நம் வீட்டுக்கு வாருங்கள். சாவகாசமாகப் பேசலாம்'' என்று சொல்லி விட்டு ரங்கநாத முதலியார் சென்றார்.

அவர் போனதும் மாசிலாமணி தம் மனைவியைப் பார்த்து, ''அடியே இனிமேல் அந்தக் கல்யாணம் இந்த வீட்டிலே காலை வைச்சால்...'' என்று கறுவினார்.

''இந்தாங்க, உங்களால் நிறைவேற்ற முடியாத சபதம் எதையும் பண்ணாதீர்கள்! கல்யாணத்தின் காலை முறிக்க உங்களால் ஆகாது. வேணுமானால் இந்த நாற்காலியின் காலை முறிச்சு அடுப்பில் வைக்கிறதா சபதம் எடுத்துக்குங்க. நாற்காலி வீட்டின் சொந்தக்காரருடையதுதான், நம்முடையதில்லே!''

ரங்கநாத முதலியாருக்கும் தன் பெற்றோருக்கும் இடையில் நடந்த உரையாடலையெல்லாம் உள் அறையிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த கமலா, முதலில் திடுக்கிட்டாள். பிறகு மௌனமாய் கண்ணீர் பெருக்கி அழத் தொடங்கினாள். (தொடரும்)



# ரிப்பேருக்காக அதிக செலவு செய்யாதீர்கள்

## தவறாமல் உபயோகியுங்கள், முச்செயல் புரியும்

**3 IN 1**

# த்ரீ-இன்-ஒன் ஆயில்

தையல் மெஷின், சைக்கிள், மின்விசிறி, பூட்டு, கீல் மற்றும் பல்வேறு வீட்டுப் பொருட்களைத் தவறாமல் மசகிட்டு பராமரிக்க வேண்டும். இல்லையேல், அவை துருப்பிடித்து பாழாகிவிடும்; தூசி அடைத்துக்கொள்வதால், தடங்கலின்றி அவை இயங்குவது பாதிக்கப்படும்.

எல்லா எண்ணைகளுமே ஒரே சீராகப் பலன் தருவதில்லை. த்ரீ-இன்-ஒன் ஆயில் தரமுயர்ந்த எண்ணை. அது 3 வழிகளில் செயலாற்றுகிறது.

✓ **மசகிடுகிறது**
—உங்கள் இயந்திரம் தடங்கலின்றி இயங்க உதவுகிறது.

✓ **சுத்தம் செய்கிறது**
—இது பிசுக்கை அகற்ற பிரத்தியேகத் திண்மையுடன் தயாரிக்கப்பட்டிருப்பதால், சீராகப் பரவி, தூசி அடைத்துக் கொள்ளாமல் தடுக்கிறது.

✓ **துருப்பிடிப்பதைத் தடுக்கிறது**
—இந்த எண்ணையில் மட்டுமே அலாதியான, துருவை எதிர்க்கும் பொருள் கலந்துள்ளது.

உங்கள் வீட்டிலுள்ள விலையுயர்ந்த பொருள்களைத் தவறாமல் சீரான மசகெண்ணை இட்டுப் பாதுகாத்திடுங்கள். த்ரீ-இன்-ஒன் ஆயில் உபயோகியுங்கள்.



# த்ரீ-இன்-ஒன் ஆயில்

## பாதுகாப்புக்கு—ஓர் இணையற்ற எண்ணை.



GM : T/1/75 A

# சேரமான் காதலி

கண்ணதாசன்

## அத்தியாயம் 15

## வெஞ்சின வஞ்சி

**வ**ஞ்சிக்குக் கல்யாணி செல்வதற்கு, தம்மை அறியாமல் சம்மதம் கொடுத்தார் ஸ்ரீ வல்லபர்.

''எப்படி நீங்கள் வஞ்சிக்குச் செல்வீர்கள்?'' என்று கேட்டான் மார்த்தாண்ட வர்மன்.

''சிம்மத்தின் மீதேறி!'' என்று திடமாகக் கூறினள் கல்யாணி.

மெல்லிளங் கோதையின் மெய் சிலிர்த்தது.

கள்ளியங்காட்டு கிருஷ்ணன் கோவிலில் இரண்டு பல்லக்குகள் உண்டு.

கோவிலுக்கு வந்த யாராவது நோயுற்றால் அந்தப் பல்லக்கில் அவர்களை ஏற்றி ஊதியம் பெறும் ஊழியர்களைக் கொண்டு அதைத் தூக்கச்செய்து அனுப்புவது வழக்கம்.

அந்தப் பல்லக்குகளில் ஒன்றில் கல்யாணியை அமர்த்தி, நான்கு சேடர்களையே அதைத் தூக்கச் செய்தார் ஸ்ரீவல்லபர்.

அவரும் மார்த்தாண்ட வர்மனும், மெல்லிளங்கோதையும் புரவிகளில் ஏறி அமர்ந்தார்கள். பல்லக்கைப் பார்த்து அவர்கள் கண்ணீர் சொரிந்தார்கள்.

பல்லக்கு வஞ்சி நோக்கி நகர்ந்தது. புரவிகள் திருவனந்தபுரம் நோக்கி நடந்தன.

**மா**ர்த்தாண்ட வர்மனின் சடலத்தைப் பார்த்ததும் தானும் ஒரு சடலம்போலவே நின்றான் ரவி வர்மன்.

அழுகை, சிரிப்பு அனைத்தையும் தாண்டிவிட்ட ஒரு மயக்க நிலை.





'மார்த்தாண்ட வர்மன் இருந்தால் என்ன? இறந்தாலென்ன? மகுடமும் களவு போய், மக்களும் கேலி செய்கிற அளவுக்கு வந்த பிற்பாடு, அரச பீடத்தில் இனித் தான் அனுபவிக்கப்போகிற சுகம்தான் என்ன? ஒருவேளை மார்த்தாண்டவர்மன் உயிரோடிருந்தாலாவது அவனை அநுசரித்துக் கொண்டிருக்கலாம். நாராயண நம்பூதிரியையும் வசப்படுத்தியிருக்கலாம். வஞ்சி மக்களைத் திருப்திப்படுத்தி அரியாசனம் ஏறியிருக்கலாம். அவனுடைய மரணத்தில் தான் அடையப்போகும் லாபம் என்ன?'

அவன் சிலையாகச் சமைந்து நின்றான்.

தாவணி சகோதரிகளும், பத்மாவதியும் அழுத கண்ணீர் ஆறாகப் பெருக, அந்தச் சடலத்தைத் தொழுத கையோடு நின்று கொண்டிருந்தார்கள்.

அவர்களைப் பார்த்ததும் திடீரென்று மார்த்தாண்ட வர்மன் மீது அவனுக்கொரு பாசம் பிறந்தது. மெதுவாக அவன் அருகில் அமர்ந்து, அவன் தலையைத் தடவிக் கொடுத்தான். சடலத்தின் தலையில் இருந்த வல்லவெட்டு நழுவி விழுந்தது.

ரவிவர்மன் உடம்பு முழுதும் ரத்தம் கொதிப்பது போலிருந்தது.

கொல்லப்பட்டவன் நம்பூதிரி என்பது அப்போதுதான் அவனுக்குத் தெரிந்தது.

தாவணி சகோதரிகளும், பத்மாவதியும் அதிர்ச்சி அடைந்தார்கள்.

சுற்றி நின்ற காவலர்களை அவன் பார்த்தான். அவர்கள் மயங்கி விழுந்துவிடுகிற நிலையில் இருந்தார்கள்.

இறந்து கிடப்பவன் யாரோ ஒரு நம்பூதிரி என்பதிலே தாவணி சகோதரிகளுக்கும் பத்மாவதிக்கும் மகிழ்ச்சி. ரவிவர்மனுக்கும்கூட ஓர் அமைதி.

காவலர்கள் விளக்கம் கூற முற்பட்டார்கள். விளக்கம் தேவை இல்லை என்பதுபோல் கையசைத்தான் ரவிவர்மன்.

சடலத்தைத் தூக்கிக் கொண்டு போகும்படி ஜாடை காட்டினான்.

அவர்கள் சடலத்தைத் தூக்கிக் கொண்டு வெளியேறினார்கள்.

முழுக்க அந்தச் சடலத்தின் உடலை ஒரு போர்வையால் போர்த்தி ரதத்தில் வைத்து அவர்கள் இடுகாட்டுக்குக் கொண்டு சென்றார்கள்.

அதற்குள் நகர் முழுவதும் மார்த்தாண்ட வர்மன் கொல்லப்பட்டு விட்டான் என்ற வதந்தி பரவியது.

அரச குடும்பத்தில் அக்கறையுள்ள பலர் ஏதோ காரணத்துக்காக உலாவுவது போல் கோட்டை வெளியிலும், அங்கும் இங்குமாகவும் உலாவிக்கொண்டிருந்தார்கள்.



ரதம் வெளியே போகும்போதுகூட அதில் ஒரு சடலம் போகிறது என்பது அவர்களுக்குத் தெரியாது.

இடுகாடு நோக்கி ரதம் போய்க் கொண்டிருந்தபோது எதிரே கல்யாணி வந்த பல்லக்கு வந்தது.

பல்லக்கில் உட்கார்ந்திருந்த கல்யாணி எதிரே வந்த ரதத்தைக் கவனிக்கவில்லை என்றாலும், ரதம் பல்லக்கை நேர் கொண்டதும், அவள் உள்ளமும், உடலும் உணர்ச்சி வசப்பட்டன.

''நிறுத்துங்கள்'' என்றவள் சத்தமிட்டாள்.

பல்லக்கு மட்டுமல்ல; ரதமும் நின்றது.

பல்லக்கு கீழே வைக்கப்பட்டது. கல்யாணி பல்லக்கிலிருந்து இறங்கி ரதத்தில் ஏறி அமர்ந்து கொண்டாள்.

''தேவியின் மீது ஆணை! ரதத்தைத் திருப்புங்கள்'' என்றாள்.

ரதத்தை ஓட்டிவந்த இருவரும் ஏதோ ஒரு சக்திக்கு ஆட்பட்டவர்கள் போல் ரதத்தைத் திருப்பினார்கள்.

''ரதம் செல்லட்டும்!'' என்று ஆணையிட்டாள் அவள்.

'எங்கே செல்ல வேண்டும்' என்றுகூட அவள் கூறவில்லை.

ரதம் நேரே பகவதி அம்மன் கோவிலுக்கு முன்பிருந்த ஓர் இடத்துக்குச் சென்றது.

''சடலத்தை இறக்கி வையுங்கள்'' என்றவள் கத்தினாள்.

அங்கிருந்த மேடையில் சடலத்தை இறக்கி வைத்தார்கள் காவலர்கள்.

ஏன் அப்படிச் செய்கிறோம் என்பது கூட அவர்களுக்கு நினைவில்லை.





அந்தச் சடலத்தின் மீது விழுந்து கல்யாணி ஓவெனக் கதறியழுதாள்.

அங்கே மெது மெதுவாகக் கூட்டம் கூடத் தொடங்கிற்று.

''வஞ்சி நகரத்து மக்களே, ஏ, வஞ்சகக் குடிமக்களே, வஞ்சகம் அறியாத என் மணவாளன் கொல்லப்பட்டுக் கிடப்பதைப் பாருங்கள். பகைவர்களைக் கொல்லவேண்டிய உங்கள் கத்தி, பக்தி மார்க்கத்தில் உள்ள ஒருவரைக் குத்திச் சாய்த்திருப்பதைப் பாருங்கள். என் கணவர் மன்னர் குலத்தை அழித்தாரா? மகுடத்தை அபகரித்தாரா? தன்னலங் கருதித் தாயகத்தைக் காட்டிக் கொடுத்தாரா? கண்ணன் அடியில் கனிந்துருகிக் கிடந்த அவரைக் கொன்று குவித்ததொரு கூட்டம்.

''கோட்டையைக் கைப்பற்றிக் கொலுவிருக்கும் அந்தக் கூட்டம், என் மங்கலம் பறித்

தது; மஞ்சளை அழித்தது: குங்குமச் சாந்தைக் கொத்தோடு கலைத்தது.

"'அறியாமற் கொன்றேன் கோவலனை' என்றலறி அரியணையில் இருந்து விழுந்து உயிர்விட்டான் மதுரைப் பாண்டியன். அறிந்து கொல்லும் வஞ்சகர் கூட்டம் இன்னும் சிறந்து வாழ்கிறது இங்கே. நன்றிக்குப் பேர்போன நம்பூதிரிகள் வம்சத்தில் கொன்று போடப் பட்ட முதல் தம்பிரான் என் நாயகன்.

"இன்னும் நம்பூதிரிகள் சபை என்ன செய்கிறது? என்ன செய்கிறது?"

கல்யாணி இப்போது குலமகள் கல்யாணியாகப் பேசவில்லை. ஆத்திரத்தில் பொறி பறக்கும் தீத்திறத்து மறமகளாக நின்று பேசினாள்.

கூடியிருந்த கூட்டத்தில் சிலர் அனுதாபப்பட்டார்கள். மாதர்கள் கண்ணீர் வடித்தார்கள். நம்பூதிரிகள் சடலத்தைச் சூழ்ந்து கொண்டார்கள்.

சடலத்தை அப்படியே விட்டுவிட்டு, தலைவிரி கோலமாக வஞ்சி நகரத்து வீதிகளிலே ஓடினாள் கல்யாணி.

சிலம்பு வடித்த சேர நாடு சிலம்பின் செல்வியைக் கண்ணெதிரே கண்டு விட்டது போல் அவளுக்கு வழி விட்டது.

'நம்பூதிரி ஒருவர் கொல்லப்பட்டார்; அவர் மனைவி நியாயம் கேட்கிறாள்' என்ற செய்தி காட்டுத் தீபோல் எங்கும் பரவியது.

வஞ்சியில் இருந்த நம்பூதிரிகளில் பலர் நம்பூதிரிகள் சபைக்கு ஓடிவந்தார்கள்.

கிராம சபைத் தலைவர்கள் வேறு காரியமாக நாராயண நம்பூதிரியைச் சந்திக்க ஏற்கனவே அங்கே வந்திருந்தனர்.

சபை மண்டபத்துக்குள் தலைவிரி கோலமாக நுழைந்தாள் கல்யாணி.

"நாராயண நம்பூதிரி!..." என்று ஓங்கி உச்சரித்தாள்.

அப்படி அவர் பெயரைச் சொல்லி ஒரு பெண் அழைப்பது இதுவே முதல் தடவை.

நம்பூதிரி அவளையே கூர்ந்து பார்த்தார்.

"உன் சபை என்ன செய்கிறது? நம்பூதிரிகள் வம்சத்துக்கு நாசகாலம் தொடங்கி விட்டது. பரசுராமன் உண்டாக்கிய சேர நாட்டின் ஆதித் தலைமுறை ஒடிந்து தொங்கும் தென்னை போல் தலை கவிழ்ந்து நிற்கிறது. இதற்கு மேல் ஒரு கெட்ட காலம் இந்த வம்சத்துக்கு வரப்போவதில்லை.

"கள்ளியங்காட்டு கிருஷ்ணனுக்கே தன்னைக் கட்டளையாக்கிக் கொண்ட என் நாயகன் மரணத்துக்கு நீங்கள் என்ன பரிகாரம் தேடப் போகிறீர்கள்?

"நானே இந்தச் சேர நாட்டில் ஒரு நம்பூதிரியும் உயிரோடிருக்கக் கூடாது. நம்பூதிரிகள் எல்லாம் தீக்குளியுங்கள். ராஜதந்திரிகள் இல்லாமல் இந்தச் சேர நாடு அழியட்டும்.

"ஈன்ற தாயையும் இனிய பொன் நாட்டையும் கட்டிக் காத்து, சான்ற திருமாலின் சந்நிதியில் தலைவைத்து ஆன்ற பெரியோனைய் அடங்கப் போகும் குலசேகரனின் நாடா இது?

"வஞ்சகப் பாவிகள் கொஞ்சி விளையாடும் வஞ்சி நகரம் அழியட்டும்! வஞ்சி நகரம் அழியட்டும்!" என்று அலறினாள் கல்யாணி.

"அமைதி தாயே, அமைதி" என்றார் நாராயண நம்பூதிரி.

"போர்க்களத்தில் அமைதியா? புகை மூண்ட பின் நெருப்பு வராமல் இருக்குமா? இடி இடித்து மழை வராமற் போனால் எவனோ ஒரு பாவி இருக்கிறான் என்றல்லவா பொருள்!" என்றாள் கல்யாணி.

"நீ பட்ட துயரம் அறிவோம் தாயே! திக்குகள் எட்டும் நடுக்குறும் வண்ணம் கட்டிய நாயகன் சடலத்தின் முன்னே உன் கண்ணீர் கனலாக எழுந்ததையும் அறிவோம் தாயே.

"விண்ணிலிருந்து ஒருத்தி மண்ணுக்கு வந்தது போல் பெண்ணுலகில் மறங்கொண்டு விளங்கும் நீ, ஆத்திரப் பட்டால் சாத்திரங்களும் வெந்து போகும்.

"தேவியின் பெயரால் அமைதி கொள். தேவியின் பெயரால் அமைதி கொள்" என்றார் நாராயண நம்பூதிரி.

"நீதியை உலகம் அறிய ஆதிசக்தியே என்னை அனுப்பி யிருக்கிறாள். அவளது ருத்ர தாண்டவத்துக்கு நீங்கள் தாளம் தட்டுங்கள். இனி அமைதி என்பதில்லை.

"எனது திருமுக மஞ்சளே வானத்து மஞ்சளாயிற்று. எனது விழிகளின் நெருப்பே வஞ்சிக்கு நெருப்பாகட்டும்" என்று வெஞ்சினம் உரைத்த கல்யாணி, அங்கு சுவரோரமாக இரவு பகல் எரியும் தீவட்டி ஒன்றை அப்படியே எடுத்து மண்டபத்தின் உச்சியில் ஓங்கி எறிந்தாள்.

பொன் மயமாக இருந்த நம்பூதிரிகள் சபை, வஞ்சிக்கு வருவோர்க்கெல்லாம் கண்காட்சியாக இருந்த நம்பூதிரிகள் சபை கொழுந்து விட்டு எரியத் தொடங்கிற்று.

அங்கு பற்றிய தீயைக் காற்று விசிறிக் கொடுத்தது. வான மண்டலத்தில் கரும் புகை பறந்தது: அது வஞ்சி மக்களின் கண்களுக் கெல்லாம் தெரிந்தது.

"நம்பூதிரிகள் சபை எரிகிறது; எரிகிறது" என்று ஊரெங்கும் கூச்சல் கேட்டது.

அது ரவிவர்மன் காதிலும் விழுந்தது.

நான்கு புறமும் வேடர் தாக்க நடுவில் துடிக்கும் புலிக் குட்டியைப் போல் அவன் துடித்தான்.

சித்தப் பிரமை பிடித்தவர்கள்போல் தாவளி சகோதரிகளும், பத்மாவதியும் இருந்தார்கள்.

நம்பூதிரி சபை மண்டபத்தை விட்டு நாராயண நம்பூதிரியும் கல்யாணியும் மட்டுமே தீக்காயம் ஏதுமின்றி வெளியில் வந்தார்கள்.

மண்டபத்தின் உள்ளிருந்த அத்தனை நம்பூதிரிகளும் ஆன்மாவை அடக்கித் தண்ணீரிலே குளிப்பதைப் போல் அந்தத் தீயிலே குளித்தார்கள்.

பல்லாண்டு காலம் ஒளி மயமாகத் திகழ்ந்த அந்தப் பளிங்கு மண்டபம், விதவைக் கோலத்தில் காட்சியளித்தது.

உள்ளே எரிந்து கிடந்த நம்பூதிரிகளின் சாம்பல், வஞ்சி நகரம் முழுவதுமே எரிந்து கிடப்பதைப் போல் காட்டிற்று.

அரண்மனைக் கோட்டை வெளியில் கல்யாணியும், நாராயண நம்பூதிரியும் நுழைந்தபோது சாபக்கேடான அந்த அரண்மனை அவர்களைத் தலைகுனிந்து வரவேற்றது.

பல்லாயிரம் படைவீரர்கள் 'வருகிறார்கள் என்றாலும் நடுங்காத ரவிவர்மன், 'கல்யாணியும் நாராயண நம்பூதிரியும் வருகிறார்கள்' என்றதும் நடுங்கினான்.

சேர நாடே தனக்கு எதிராகத் திரும்பி விட்டதோ என்ற பயங்கரத் துயரில் ஆழ்ந்தான்.

தாவளி சகோதரிகள் மரண தேவதையை எதிர்கொண்டு அழைப்பது போல் கல்யாணியை எதிர் கொண்டு அழைத்தார்கள்.

''பாபங்களின் தலைநாயகனே, பாவப்பட்ட பெண்ணொருத்தி உன்னைப் பார்க்க வந்திருக்கிறாள்'' என்ற நாராயண நம்பூதிரியின் குரல் எங்கோ தொலை தூரத்தில் இருந்து கேட்பது போல் ரவிவர்மனுக்குக் கேட்டது. ஆனால் நாராயண நம்பூதிரி பக்கத்திலேதான் நின்று கொண்டிருந்தார்.

கடல் பொங்கிய நிலையில் உடல் பொங்கிய கனகமணிச் சிலை கல்யாணி, இப்போது ருத்ர தேவதையாக இல்லை; சாந்த நாயகியாக நின்றிருந்தாள்.

''தாயே, காப்பாற்று!'' என்று அவள் காலில் விழுந்தாள்.

'யார்?

ஆம்; பத்மாவதி.

ரவிவர்மன் கீழே விழாமல் நின்றதே அதிசயம்.

அடுக்கடுக்காகத் துன்பம்; ஏமாற்றம்; அந்தப் பயங்கரத்திலிருந்து அவன் மீளவே இல்லை.

கல்யாணி எதுவும் பேசவில்லை; முன்னால் நடந்தாள்.

பக்கத்திலேயே நாராயண நம்பூதிரி நடந்தார்.

பின்னால் ரவிவர்மன் நடந்தான்.

அவனைத் தொடர்ந்து பத்மாவதி நடந்தாள்.

அவளுக்குப் பின்னால் தாவளி சகோதரிகள் நடந்தார்கள்.

தூக்கத்தில் நடப்பது போல் அனைவரும் நடந்து வெளியே வந்தார்கள்.

அவர்களைத் தொடர்ந்து வஞ்சியின் குடிமக்கள் பலர். நடந்தார்கள்.

வஞ்சியின் தெருக்களிலே அவர்கள் நடந்தார்கள்.

வஞ்சியின் எல்லையையும் கடந்தார்கள்.

கல்யாணி அவர்களை எங்கே அழைத்துச் செல்கிறாள்? (தொடரும்)

ராஜாஜி சிந்தனை

## அன்பால் நிறைந்த உள்ளம்

சத்தியாக்கிரக முறைகளில் தியாகத்துக்குள்ள சம்பந்தத்தைப் பற்றி ஒரு சமயம் நானும் மகாத்மாஜியும் விவாதித்துக் கொண்டிருந்தோம். அப்போதுதான் அவரிடம், ''வேல்ஸ் இளவரசர் பகிஷ்கார இயக்கத்தில் தியாகம் என்பதற்கு ஏதேனும் இடமுண்டா? அது வெறும் அரசியல் சூழ்ச்சி மட்டும்தானே?'' என்று கேட்டேன். அவர் உடனே, ''அப்படியா எண்ணுகிறீர்கள்? வேல்ஸ் இளவரசரைச் சந்திக்காத்தால் என் மனம் எப்படி வேதனைப்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியவில்லை. அவமரியாதையாக நடந்து கொள்வதை எண்ணும்பொழுது என் மனத்தில் அதிக வேதனை உண்டாகிறது. அது ஒரு பெரிய தியாகம் அல்லவா?'' என்று உணர்ச்சியுடன் கூறினார். இதிலிருந்து மகாத்மாஜியின் உண்மையான உள்ளத்தை அறிந்து கொள்ளலாம். அவர் உள்ளம் முழுதும் அன்பால் நிறைந்திருக்கிறது. அவருக்கு இரத்த பேதம் என்பது அணுவளவுக்குக்கூடக் கிடையாது. ஆங்கிலேயரைப் பற்றி ஏதேனும் கடுமையாக எழுத வேண்டியிருக்கும்போது அவர் தம்முடைய சொந்த சகோதரரைப் பற்றிக் கடுமையாகச் சொல்லும் பொழுது எவ்வளவு வேதனை அனுபவிப்பாரோ அவ்வளவு வேதனையை அனுபவித்தார்.

— ''அக்டோபர் இரண்டாம் தேதி'' என்ற கட்டுரையில்



விதான சௌதா பழம் பெருமையாகிறது!

## நகர்வலம்:



# பங்களூர் பார்த்தோம்

இந்தப் பயணக் கட்டுரையை ''கவாரசியமான'' விதத்தில் ஆரம்பிக்க முடியாததற்காக வருந்துகிறேன்! சில அதிர்ஷ்டக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பிரயாணத்தைத் தொடங்கிய உடனேயே விமான உபசரிணி நங்கை வந்து அவர்கள் தோளில் உரசிக் கொண்டு நிற்பாள்! இது போதாதென்று போக வேண்டிய ஊருக்கு அவர்கள் போய்ச் சேர்ந்ததும் முதல் காரியமாக அந்த ஊரில் உள்ள சிவப்பு விளக்குப் பகுதிகளைப் பார்வையிடுவார்கள். தப்பித் தவறி இவர்கள் அந்தப் பகுதிக்குப் போகா விட்டாலும் அந்தப் பகுதிப் பெண்கள் இவர்களைத் தேடி வந்து விடுவார்கள்!

ஆனால் அத்தகைய ''கவாரசியத்தை'' வாசகர்களுக்கு எடுத்த எடுப்பிலேயே என்னால் ஊட்ட முடியவில்லை. ஏனெனில் நான், ''பங்களூர் போகிறேன்'' என்றதுமே என் மனைவி ''நானும் வருகிறேன்'' என்று ஆரம்பித்து விட்டாள். கூடவே குழந்தைகளும் புறப்பட்டு விட்டார்கள். அப்புறம் சிவப்பாவது விளக்காவது? நான் பார்த்த சிவப்பு விளக்கெல்லாம் சாலையில் மூன்றும் சென்று கொண்டிருந்த கார்களின் விளக்குகள்தாம்!

பங்களூர் என்றதுமே பலருக்குப் பலவித விஷயங்கள் நினைவுக்கு வரும். டிபன்–காப்பிப் பிரியர்கள் பிரசித்தி பெற்ற மாவலி டிபன் ரூம்களை எண்ணி நாக்கைச் சப்புக் கொட்டுவார்கள். சரித்திர ஆர்வமுடையவர்கள் அங்குள்ள கோட்டை — அரண்மனை முதலியவற்றை நினைத்துக் கொள்வார்கள். இயற்கை உபாசகர்கள் லால்பாக் போன்ற தோட்டங்களையும் உல்ஸூர் ஏரியின் அழகையும் எடை போடுவார்கள். மது அருந்துவோர் எதற்கு ஏங்குவார்கள் என்று கூறத் தேவையில்லை. எங்கள் குடும்பத்துக்குக் கொஞ்சம் சினிமாப் பைத்தியம் உண்டாதலால் பங்களூர் என்றதுமே அங்கே திரும்பிய பக்கமெல்லாம் காட்சியளிக்கும் சினிமா தியேட்டர்கள்தாம் நினைவு வந்தன. (மொத்த எண்ணிக்கை எழுபத்தைந்து!)

முதல் காரியமாக சினிமா பார்த்து விடுவது என்று ''ஷோலே'' ஓடிக் கொண்டிருந்த தியேட்டருக்குள் நுழைந்தோம். அங்கே ஒன்றல்ல, இரண்டல்ல, ஐந்து விரல்களையும் மூக்கின் மேல் வைத்து ஆச்சர்யப்பட விஷயங்கள் இருந்தன. முதல் ஆச்சர்யம், 'யதார்த்த நோக்கு சிறிதும் இல்லாமல்

பூங்கா நகரம் என்று வர்ணிப்பதுண்டு. (லால்பாக்)







இன்று தொழில் நகரமாக விளங்குகிறது. (பாரத் எலெக்ட்ரானிக்ஸ்)

இப்படியும் ஒரு திரைப்படம் எடுக்க முடிந்ததே' என்பது. இரண்டாவது அந்தத் திரைப் படத்தில் காணப்பட்ட அபாரமான கலை நுணுக்கங்கள். மூன்றாவது இத்தனை நாட்கள் ஓடியும் தியேட்டர் நிரம்பி வழிந்தது. நாலாவது. 'தியேட்டர் பொங்கு புனல்களும் கண்ணாடிச் சுவர்களுமாய் இத்தனை அழகாயிருக்கிறதே' என்பது. (பங்களூரில் பல தியேட்டர்கள் மிக நேர்த்தியான முறையில் கட்டப்பட்டுள்ளன.) ஐந்தாவது அந்தத் தியேட்டரில் கழிவறைகள் வெகு சுத்தமாகப் பராமரிக்கப்பட்டிருந்தன.

சினிமாத் தியேட்டரே ஒரு புதுமைக் கண்காட்சி போலிருந்தாலும் பங்களூரில் மியூசியம், ஆர்ட் காலரி எல்லாம் உண்டு. மியூஸியம் எல்லா ஊர்களிலும் காணப்படுவது

## கி. ராஜேந்திரன்

போன்றதுதான். விசேஷமாகக் கவனத்தைக் கவர்வது உயரமான ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள மாடிப்படி.

மியூஸியத்தில் உள்ள புராதனச் செல்வங்களுக்கு ஒரு மாறுதலாக அருகேயுள்ள ஆர்ட் காலரியில் நவீன கால ஓவியங்கள், சிற்பங்கள் பல இடம் பெற்றுள்ளன.

இவற்றை விடச் சுற்றுலாப் பயணிகளை அதிகமாகக் கவர்வது விசுவேசுவரய்யா பெயரால் உருவாகியுள்ள விஞ்ஞானக் கூடம்.

இங்கே சிறுவர் முதல் வயோதிகர் வரை பலரும் விஞ்ஞானத் தத்துவங்களை எளிதில் புரிந்து கொள்கிற மாதிரி வாமன உருவில் பல பொறிகளை வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு பொறியையும் பக்கத்திலுள்ள ஒரு ஸ்விட்சை அழுத்தி இயங்கச் செய்ய முடியும். உதாரணமாக நீரின் சக்தியைப் பயன்படுத்தும் விதத்தை விளக்கப் பித்தானை அழுத்தியதும் மறைவிடத்திலிருந்து நீர் ஆற்றுப் படுகையில் ஓடி வருகிறது. அது ஆற்றோரமாய் அமைக்கப்பட்டுள்ள ஒரு பல் சக்கரத்தைச் சுழலச் செய்கிறது. சக்கரத்தின் சுழற்சியுடன் ஒரு கொல்லன் பட்டறையின் கருவிகள் இணைந்துள்ளதால் அவையும் இயங்குகின்றன. எல்லாம் கொலுப் பொம்மைகள் போன்றவை, ஆனால் இயக்கமுடையவை, விஞ்ஞானத் தத்துவங்களை விளக்குகிறவை. என் மனைவி இரண்டு மாடி ஏறி விட்டு, ''போதும், மற்ற மாடிகளிலும் எல்லாம் இதே மாதிரிதான் இருக்கும்'' என்று சொல்லி விட்டாள். ஆனால் என் எட்டு வயது மகன், ஒரு மாடி பாக்கியில்லாமல் போய் ஒவ்வொரு பொறியையும் 'ஸ்விட்ச்'சை அழுக்கி இயங்கச் செய்து பார்த்து மகிழ்ந்தான். விஞ்ஞான தத்துவம் புரிந்ததோ இல்லையோ, பொம்மைகள் அசைவதையும் சக்கரங்கள்





கப்பன் பூங்காவில் மேஜர் கப்பன் சிலை. கப்பன் மேல் அமர்ந்திருப்பது யார் என்று குழந்தைத் தனமாகக் கேட்கக்கூடாது !

கழல்வதையும் பார்க்க ஆனந்தம். கீழே திரும்பி வந்த பிறகு, ''அம்மா! நீ வராமல் போயிட்டியே?'' என்றான். அவன் தாயாருக்கு மகன் அப்போதே ஒரு விஞ்ஞான மேதையாகி விட்டது போல் ஆனந்தம். ''எல்லாம் பார்த்தியாடா? பிடிச்சுதா?'' என்று கேட்டாள். ''ஓ! ஐந்தாவது மாடியில் காண்டீன்; ஐஸ் கிரீம் பிரமாதம்!'' என்றான் மகன்.

பங்களூர் லால்பாக்கும் கப்பன் பார்க்கும் மைசூர்பாக் அளவுக்குப் பிரசித்தம். இந்தப் பூங்காக்களுக்கு முதன் முதலில் போகிறவர்கள், 'இது என்ன சோம்பேறி மடமாயிருக்கிறதே' என்று எண்ணுவார்கள். ஊரில் வேலை வெட்டி இல்லாதவர்கள் எல்லாம் லால்பாக் மரங்கள் விரிக்கும் அடர்ந்த நிழலுக்கடியில் அடைக்கலம் புகுந்து ஆனந்தமாய்த் தூங்குகிறார்கள்! முதல் பார்வையில் ஏற்படும் இந்தக் கருத்து ஆழப் பதிந்து விடுகிறதென்றாலும் பூங்கா வேறு பல காரியங்களுக்கும் பயன்படுவதை விரைவிலேயே காணலாம். பரீட்சைக்குத் தொந்தரவின்றிப் படிக்க வந்து சேருகிறவர்கள் பலர். காதலர்கள் மனம் விட்டுப் பேச இந்தப் பூங்காக்களையே தேர்ந்தெடுக்கிறார்கள். வயோதிகர்களின் வம்பர் மகாசபை கூடுகிறது. எங்களைப் போன்று விடுமுறையில் வந்த குடும்பங்கள் பிக்னிக்கைத் தொடர்ந்து சீட்டாடவும் உதவுகிறது. தாவர இயல் விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிக்கு இடமளிக்கிறது. பிஜித் தீவிலிருந்து வந்திருந்த ஓர் ஆராய்ச்சியாளர் அங்கு கரும்புப் பயிரை அழித்துவிடும் ஒருவித பூச்சிகளை ஒழிக்க இங்கே செடிகளில் காணப்பட்ட ஒரு ரகக் குளவிகளைத் தேடி அது கொட்டி விடாமல் சாமர்த்தியமாகப் பாட்டிலில் அடைத்துக் கொண்டிருந்தார்! லால்பாக்கிலுள்ள சிறிய அக்வேரியத்தில் மீன்கள் அதிகமான ரகத்தில் இல்லை. ஆனால் உள்ள சொற்ப ரகத்தவை மிக அற்புதமான கலையுணர்வோடு காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

கப்பன் பார்க்கின் ஒரு பகுதியில் பல சிறப்புக்களுடன் இயங்கும் குழந்தைகள் பூங்காவில் மினி ரயில் உண்டு. குழந்தைகளைச் சாக்கிட்டுக் கொண்டு பெரியவர்களும் இதில் ஏறி இரகசியமாக மனத்துக்குள் மகிழ்கிறார்கள்!

உல்சூர் ஏரி மிகப் பெரிது. நடுவே மூன்று குட்டித் தீவுகளைக் கொண்டது. ஏரியில் சுற்றி வரப் படகுகள் உண்டு. ஆனால் நாங்கள் போனபோது எல்லாப் படகுகளும் ஏற்கனவே வாடகைக்கு விடப்பட்டு விட்டன. ''விசைப்படகு இருக்கிறது; பதினைந்து நிமிஷங்களுக்குப் பத்து ரூபாய்'' என்றார் நிர்வாகி. ''பத்து ரூபாயா? வேண்டாம், வேண்டாம்'' என்றாள் என் மனைவி. உடனே காத்திருந்த வேறு ஒரு குடும்பம் அதில் ஏறிக் கொண்டது. எங்களுக்கு ஏற்பட்ட பொறாமை சீக்கிரமே பச்சாத்தாபமாக மாறியது! படகோட்டி விசைப்படகின் இயந்திரத்தைக் கிளப்பினார்! கிளப்பிக் கொண்டே இருந்தார். அதுவும் கிளம்ப மறுத்துக் கொண்டே யிருந்தது!

இந்தப் படகுத் துறைக்கு எதிரே, ராணுவச் சேவையிலோ அல்லது வேறு விதத்திலோ நிரந்தரமாக ஊனமுற்றவர்களுக்கான ரெட் கிராஸ் இல்லம் இருக்கிறது. சக்கர நாற்காலிகளில் அமர்ந்து மட்டுமே நகரக் கூடிய இவர்கள் மாலை நேரங்களில் ஏரிக் கரையில் காற்று வாங்கியபடி பேசிக் கொண்டிருக்கிறார்கள். பரிமாறிக் கொள்ள அவர்களுக்கு வீரக் கதைகளுக்கா பஞ்சம்? அவர்களைப் பார்க்கும்போது போரின் கொடுமையும் தெரிகிறது. வீரத்தின் மேன்மையும் புரிகிறது.

ஏரிக்கரையில் அமர்ந்து குள்ள வாத்துக்களின் சேஷ்டைகளையும் மீன் கொத்திகளின் ஆற்றலையும் பார்த்துக் கொண்டே யிருந்தால் நேரம் போவதே தெரியாது. பசி வயிற்றைக் கிள்ளும் வரை.

மாவலி டிஃபன் ரூம்ஸ் நாங்கள் போயிருந்த போது மூடியிருந்தது. ஹோட்டல் பண்டங்களின் விலை நிர்ணயச் சட்டம் அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்று பேசிக் கொண்டார்கள். ஆனால் பங்களூரில் மூலைக்கு மூலை தென்படும் காமத் ஹோட்டல்கள் திறந்தே இருந்தன. ஒரே ஹோட்டல், ஒரே பெயர், ஏராளமான கிளைகள். டிஃபன் காப்பி தரமாயிருந்தன என்றாலும் விலை நிர்ணயம் ஹோட்டல் நிர்வாகிகளிடையே பொதுவாக அதிருப்தியையே ஏற்படுத்தியுள்ளது. ஹோட்டல்களை ஏ, பி, ஸி என்று தரம் பிரித்து விட்டு விலைகளை நிர்ணயிக்க வேண்டும் என்று கருதுகிறார்கள்.

என் மகன் சரித்திர மாணவியாதலால் திப்புவின் அரண்மனையையும் பங்களூர் கோட்டையையும் அவனுக்குக் காட்ட எண்ணி அழைத்துப் போனேன். அரண்மனை சிறிது தான். நடுவே தர்பார் மண்டபமாகவும் இருபுறமும் சில அறைகளைக் கொண்டதாகவும் உள்ளது. சரித்திர காலத்தில் புது மெருகு குன்றாமல் விசாலமான தோட்டத்துடனும், ராஜ பரிவாரங்களுடனும் ஜாஜ்வல்யமாகத் திகழ்ந்திருக்கும் என்பதைக் கற்பனைக் கண் கொண்டு பார்த்து மகிழ்ந்தேயாக வேண்டும். ஏனென்றால் அந்த அரண்மனையை அன்று வர்ணித்த புலவர்கள் அது சொர்க்கலோகத்தினரின் பொறாமைக்கு உள்ளானதாகக் கூறியுள்ளனர். அந்தச் சரித்திரச் சான்று பொய்த்துப் போக நாம் விடலாமா?

கோட்டைச் சுவரில் ஆங்கிலேயர் தகர்த்துக் கொண்டு முன்னேறிய இடத்தில் ஞாபகார்த்தக் கல் பதித்திருக்கிறார்கள். அதைத் தாண்டி வாசலுக்குள் நுழைந்துபோனபோது சரித்திர காலத்தையே நினைவூட்டும் ஒரு காட்சியைக் கண்டோம்! உட்புறச் சுவரில் மேலேயிருந்து கயிறுகளில் தொங்கிய படி சிலர் கத்தி வீசிக் கொண்டிருந்தார்கள்!

---



ஓட்டுனர் எதற்கு?

டில்லி பஸ்கள் 'கண்டக்டர்கள் இல்லாமல் ஓடப் போகின்றன' என்ற செய்திக்கு 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' அளித்த ஜோக்: 'டிரைவர்கள் இல்லாமல் ஓடினால் ஆபத்து இல்லாமலிருக்குமே!' — பாபு

சுற்றுமுற்றும் பார்த்தோம். கோட்டைத் தாக்குதலை யாரும் சினிமாப் படமெடுத்துக் கொண்டிருக்கவுமில்லை. அப்புறம்தான் புரிந்தது. அவர்களுடைய போர் கோட்டைச் சுவர் இடுக்குகளில் வளர்ந்துவிட்ட செடி புதர்களுடன் நடக்கிறது என்பது. வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்தார்கள் அவற்றை.

விஜயநகர சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த ஒரு சிற்றரசன் கெம்பகௌடா நானூறு ஆண்டுகளுக்கு முன் ஸ்தாபித்த நகரம் பங்களூர். அவன் நினைவைப் போற்றும் விதமாகச் சிலை எடுத்திருக்கிறார்கள். ம. பொ. சி.க்கு ராஜபார்ட் வேஷம் போட்டது போல் இருக்கிறது சிலை!

பங்களூரில் இரண்டு விநோதமான கோயில்கள் உள்ளன. சாதாரணமாக நாம் சிவலிங்கத்தைத் தான் மூல ஸ்தானத்தில் பார்ப்போம்; நந்தி பகவான் எதிரே இருப்பார். இங்கே ஒரு குன்றின் மீது பிரும்மாண்டமான நந்திக்கே முதலிடம் தந்து சிவபெருமான் தனித்துச் சிறுத்து ஒதுங்கிக் கொண்டிருக்கிறார். கோயிலுக்கு ''புல் டெம்பிள்'' என்றே பெயர். சாலையும் புல் டெம்பிள் ரோட்தான். (Bull Temple).

மற்றொரு விசித்திரம், குகைக் கோயில். இங்கே மூலவரை வலம் வருவதென்றால் எண்சாண் உடம்பை மூன்று சாணாகக் குறுக்கிக் கொள்ள வேண்டும். முதுகை வளைத்தால் போதாது. முழங்காலையும் மடித்து நடக்க வேண்டும், குகைப் பிராகாரத்தினுள்ளே. இந்தக் கோயிலை அண்மையில் புதுப்பித்துக் குடமுழுக்கும் நிகழ்த்தியுள்ளார்கள். கோயிலைப் புதுப்பித்து என்ன பயன்? சுற்றுப் புறச் சந்து பொந்துகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ள முடியவில்லையே?

இப்படி ஒன்றிரண்டு இடங்களை மக்கள் ஆபாசப்படுத்தியிருந்தாலும் அவை திருஷ்டிப்பரிகாரம் போல்தான். பொதுவாக பங்களூர் விசாலமான சாலைகளுடன் பளிச்சென்று அழகுடன் காட்சி தருகிறது.

பங்களூரைப் 'பூங்கா நகர்' என்று அழைப்பதுண்டு. ஆனால் தொழில்நகர் என்பதும் இன்று பொருந்தும். மிகப் பெரியவையும் முக்கியமானவையுமான பல தொழில்கள் இங்கு உள்ளன. டெலிஃபோன் தயாரிப்புக் கூடம், பாரத் எலெக்ட்ரானிக்ஸ், விமானத் தயாரிப்புத் தளம், பாரத் எர்த் மூவர்ஸ் தொழிலகம், ஹிந்துஸ்தான் மிஷின் டூல்ஸ் போன்றவை. இன்றும் புதுப் புதுத் தொழிலகங்கள் தோன்றிய வண்ணமே உள்ளன. இவை மக்களின் பொருளாதார உயர்வுக்கு உதவுகிற அதே நேரத்தில் நகரில் நச்சுச் சூழல் அதிகரிக்கவும் காரணமாகியுள்ளன. நகர்ப்புறத்திலிருந்து வரும் ஊழியர்களுக்கு இத் தொழில்கள் ஒவ்வொன்றும் சொந்த பஸ்களை விடுகின்றது. நகரப் போக்குவரத்தை நம்பினால் ரொம்பக் காலதாமதமாகும். பஸ் ஸ்டாண்டுகளில் ஏகக் கூட்டம்; ஆனாலும் அனைவரும் அமைதியாகக் கியூவில் நிற்பது மன நிறைவு தரும் காட்சி. அவசரத்துக்கு எளிய போக்குவரத்து சாதனம் ஆட்டோ.

அமெரிக்காவிலும் லண்டனிலும் கூட தமிழ்ச் சங்கம் இருக்கும் போது பங்களூரில் இல்லாமல் போகுமா? உல்ஸூர் ஏரிக் கரையிலேயே இருக்கிறது. 'கைட்' புத்தகத்தில் கூட இடம் பெறும் அளவில் அதன் பணிகளும் சிறக்கின்றன. பங்களூரில் கன்னடியர்களின் எண்ணிக்கை எவ்வளவோ அதற்குச் சிறிதளவுதான் குறைவு தமிழர் எண்ணிக்கை. (கன்னடியர் 30.7 சதம், தமிழர் 27.3 சதம்.)

தமிழ்ப் பத்திரிகை வாசகர்கள் 'சுஜாதா' என்ற பெயரை அறியாதிருக்க மாட்டார்கள். இந்தப் புனைபெயரைப் பூண்ட திரு ரங்கராஜன் வசிப்பது பங்களூரில். பணியாற்றுவது பாரத் எலெக்ட்ரானிக்ஸில். விஞ்ஞானக் கதைகள் எழுதிப் பிரபலமடைந்துள்ள இவர், விஞ்ஞானத்தையே தமிழில் எழுத முனைந்துள்ளார். எலெக்ட்ரானிக்ஸ் பற்றி மற்றொரு சிறுகதை எழுத்தாளர் ம. ராஜாராமுடன் சேர்ந்து எழுதி வருகிறார், ''வாசகர் வட்டம்'' சார்பாக.

பங்களூரில் மையமாக, அனைவர் கவனத்தையும் ஈர்ப்பதாக அமைந்துள்ளது விதான சௌதா கட்டடம். இன்று அதனைப் பழம் பெருமை யாக்குகிறது புதியதொரு இருபத்தைந்து மாடி கட்டிடம். உயரமான கட்டிடங்களை அதிகமில்லாத இந்த நகரில் ''பப்ளிக் யுடிலிடி பில்டிங்'' மான்களுக்கிடையே ஒட்டைச்சிவிங்கி போல் உருவாகி வருகிறது.

பக்கத்திலேயே உள்ள சினிமா தியேட்டரில் நாங்கள் போன போது ஓடிக் கொண்டிருந்தது ''டவரிங் இன்ஃபெர்னோ!''

# 40. அஞ்சலி

பொன்னியைப் போற்றுவோம்
அன்னையைப் போற்றுவோம்
பொன்னியின் புகழொளிர்
மைந்தரைப் போற்றுவோம்

தமிழர்களுக்கு ஒரு துயர நாள் அந்த ஞாயிற்றுக்கிழமை — 1954 டிசம்பர் ஐந்தாம் தேதி.

கல்கி காலமான விவரம் அன்று காலை ஆறு மணிக்கு ஒரு பி. டி. ஐ. தந்தி மூலம் டெல்லி வானொலி நிலையத்தை எட்டி, ஏழேகால் மணித் தமிழ்ச் செய்தி அறிக்கையில் ஒலிபரப்பாயிற்று. அதன் மூலந்தான் அந்தத் துக்கச் செய்தியை இந்தியாவிலும் இலங்கையிலும் வெவ்வேறு ஊர்களில் தமிழர்கள் அறிந்து கொண்டார்கள்.

சென்னை நகரிலும் பெரும்பாலோருக்கு அந்த வானொலி அறிவிப்புத்தான் கல்கியின் மறைவு பற்றிய முதற் செய்தியாய் இருந்தது. ஏனெனில், அன்றையக் காலைப் பத்திரிகைகளில் அச்செய்தி இடம்' பெற முடியவில்லை. அவர்களில் கல்கி . அன்பர்கள் பலர் அன்னாரின் வீட்டை நோக்கி விரைந்தார்கள். ஏற்கனவே டெலிபோன் மூலமும் ஆள் மூலமும் செய்தி அறிந்திருந்த நெருங்கிய உற்றார் உறவினரெல்லாம் அங்கே கூடியிருந்தார்கள். ராஜாஜி குடும்பத்தினர், சதாசிவம் குடும்பத்தினர், கல்கி நிறுவனத்தார், எஸ். எஸ். வாசன், ம. பொ. சிவஞானம்...

''தொலை தூரம் ஏகிவிட்டாய்த் துயர் அணுகாத் தூரமய்யா!'' என்று கவிஞர் எஸ். டி. சுந்தரம் புலம்பியது போல் கல்கியின் ஆவி ஆகாயத்தில் கலந்துவிட, அந்த ஆவி குடியிருந்த மேனியானது தானும் இயற்கையோடு ஐக்கியமாவதற்கு ஆயத்தமாகக் கீர்த்தி விலாசத்தின் முன் கூடத்தில் காத்திருந்தது.

அந்த மேனியைக் கண்டு அஞ்சலி செலுத்துவதற்காக அடுத்தடுத்துப் பலர் வந்தவண்ணம் இருந்தார்கள். — அரசியல் தலைவர்கள், அமைச்சர்கள், தொழிலதிபர்கள், வர்த்தகப் பிரமுகர்கள், பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்கள், வாசகர்கள், இலக்கிய நண்பர்கள், இசைக் கலைஞர்கள், நடிகர்கள் முதலானோர். சிலர் மலர்மாலைகளைச் சாற்றினார்கள்; சிலர் மௌனமாய்க் கண்ணீர் உகுத்தார்கள்; சிலர் பொங்கி அழுதார்கள்.

வேண்டியவர்கள் எல்லாரும் வந்து இறுதி மரியாதை செலுத்துவதற்கு அவகாசம் அளிப்பதற்காக மாலை நாலு மணிக்கு ஈமச் சடங்கை நடத்துவதென முதலில் தீர்மானிக்கப்பட்டது. ஆனால், கல்கியின் குடும்பத்தினரைச் சோகத்தின் கொடுமையிலிருந்து ஓரளவு விடுவிப்பதற்காக விரைவிலேயே அதை நடத்தி விடும்படி ராஜாஜி யோசனை கூறினார். அதன்படியே பதினொரு மணிக்குக் கோட்டூர் மயானத்தை நோக்கி இறுதிப் பயணம் தொடங்கிற்று. ஏற்கனவே குழுமியிருந்தோருடன் மேலும் பலர் வந்து அந்த அரை மணி நேரப் பயணத்தில் சேர்ந்து கொண்டே இருந்தார்கள்.

ஈமக் கிரியைகளைப் புத்திரன் ராஜேந்திரன் செய்து முடித்ததும், மயானத்தின் மற்றொரு பக்கத்தில் இரங்கல் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அதற்குத் தலைமை வகித்த ம. பொ. சி., தமது பிரிவாற்றாமையை உணர்ச்சிப் பெருக்குடன் வெளியிடுகையில்,

வீணையை வாணியும், எழுதுகோலைத் தமிழ்த் தாயும் தூக்கி எறிந்து விட்டது போன்ற பேரிழப்பு நேர்ந்திருக்கிறது என்றார்.

அவரை அடுத்து மற்றும் பலர் பேசினார்கள். ராஜாஜியைப் பேசும்படி கேட்டுக்கொண்டபோது, தமது துக்கம் சொல்லொணாதது எனத் தெரிவித்து, எழுந்து பேச மறுத்து விட்டார்.

அப்போது பேச மறுத்தவர், அன்று பிற்பகலில் சென்னை வானொலி நிலையத்தின் பிரதிநிதியாக மீ. ப. சோமு அவரை அணுகி விடுத்த வேண்டுகோளுக்கு இசைந்து, தமது துக்கவுரையை ஒலிப் பதிவு செய்துகொடுத்தார். அன்றிரவு ஒலிபரப்பான அந்த உரையில் அவர் ஒருவரே சொல்லக்கூடியதான சில வாக்கியங்கள் இருந்தன:

அபார மொழிகளின் வேலை முறையானது, தலைகீழாய்ப் போயிற்று. எனக்காகப் பக்கம் பக்கமாகக் கல்கியில் எழுதித் தீர்க்கவிருந்த ஆசிரியர், வயோதிகர்கள் அனைவருக்கும் முன்பாகத் தாமே சாந்தி அடைந்து விட்டார்.

பாக்கியசாலி! பூரணச் சந்திரன் மேற்கே மறைவது போல், முழுக் கலையுடன் புகழின் சிகரத்தில் தோய்ந்து மறைந்தார். புகழைக் குறைப்பதற்கும் மறப்பதற்கும் இடமில்லாமல், நம்மை ஏமாற்றி விட்டு ஏகிவிட்டார்.

கல்கியின் பிரிவானது, பத்திரிகையை வாரா வாரம் பூர்த்தி செய்து ஊக்கத்துடன் தயாரித்து வந்தவர்களுக்கும், தமிழ்நாடு முழுதும், நாட்டுக்கு அப்பால் இருக்கும் தமிழர் உலகத்திலும், ஒவ்வொரு வாரமும் படிக்கக் காத்திருந்த ஆண் பெண் சிறியோர் அனைவருக்கும், குடும்பத்துக்கு வந்த ஒரு துக்கத்தைப் போன்ற பெரிய துக்கமாகும்.

என்ன செய்வது! விதியை யாரும் வெல்ல முடியாது. துயரத்தைக் கொண்டு உள்ளத்தைச் சுத்தி செய்து கொள்வோமாக.

என் தனித் துயரத்தைச் சொல்லிப் பயனில்லை. சொல்லப் புகுந்தால் அதற்குச் சரியான மொழிகள் இல்லை.

ராஜாஜியின் இந்த உரையை அடுத்து ம.பொ.சி.யின் உருக்கமான அஞ்சலி ஒன்றும் ஒலிபரப்பாயிற்று.

மறுநாள் காலை, கல்கியின் அஸ்தியில் ஒரு பகுதியைத் திருவல்லிக்கேணிக்குச் சதாசிவம் எடுத்துச் சென்று கடலிலே சேர்ப்பித்தார். — அகக் கடலின் ஓசை அகண்டாகாரக் கடலின் ஓசையுடன் சேர்ந்து கொண்டது.

இன்னொரு பகுதியைக் கல்கியின் மருமான் கோபாலன் மாயூரத்துக்குக் கொண்டு சென்று காவேரியில் கரைத்தார் — பொன்னி நாட்டில் பிறந்து வாழ்நாள் முழுதும் அதன் பெருமையைப் போற்றியவர் பொன்னியின் புனலுடன் கலந்தார்.

மற்றும் ஒரு பகுதியைக் கோபாலனே அலகாபாத்துக்கு எடுத்துச் சென்று திரிவேணியில் சேர்ப்பித்தார் — உண்மையான பாரதப் புத்திரராய் விளங்கியவருடைய மேனியின் நீறு அந்தப் பாரத புண்ணிய நதிகளின் சங்கமத்திலும் ஐக்கியமாயிற்று.

கல்கி அமரரான செய்தியை, அந்தத் தேதி மாலைப் பத்திரிகைகளும் மறுநாள் காலைப் பத்திரிகைகளும் பெரிதாக வெளியிட்டன — இரண்டு முதல் நாலு பத்திகள் வரை. பலவற்றில் அது முதல் பக்க முக்கிய செய்தியாய் இருந்தது. அதற்கான தலைப்புக்கள், "பேனா மன்னர் மறைந்தார்", "பேராசிரியரைப் பிரிந்தோம்", "இலக்கிய வானம் இருண்டது", "தமிழ்ச் செல்வம் மறைந்தது" என்று விதவிதமாய்ப் பிரிவாற்றாமையை வெளியிட்டன. பல பத்திரிகைகளில் அஞ்சலித் தலையங்கங்களும் வெளியாயின.

நாளிதழ்களை அடுத்து வார இதழ்களிலும் இவ்வாறே செய்தியும் சிறப்புக் கட்டுரைகளும் பிரசுரமாயின.

வெவ்வேறு கட்சிகளைச் சார்ந்த பத்திரிகைகளிலும் கல்கியின் பணிகள்



சாதனைகள் பற்றிய மதிப்பீடுகள் வந்தன. அவற்றில் திராவிட முன்னேற்றக் கழகத்து இதழ்களின் மதிப்பீடுகளில் கல்கியின் எழுத்தாற்றல் பற்றிய பாராட்டுடன், ராஜாஜியை அவர் நெடுகிலும் ஆதரித்து நின்றது பற்றிய பழிப்பும் ஊடே கலந்திருந்தது. உதாரணமாய், ''அமர தாரா போயிற்று!'' என்ற தலைப்புடன், ''திராவிட நாடு'' 12–12–54 இதழில் அதன் ஆசிரியர் சி. என். அண்ணாத்துரை எழுதியது:

தமிழ்நடையில் ஒரு நகைச்சுவையையும், சரித நிகழ்ச்சிகளின் மீது சமையல் கட்டுக்குக் கூட ஒரு ஆவலையும் தூண்டிவிட்ட எழுத்தாளர் அவர். அவரது எழுத்து, செயல் பற்றி, கருத்து வேறுபாடுகள் நிறைய உண்டு. ஆனால் அவரது திறமை, செயல் வன்மை நிச்சயம் பாராட்டுக்குரியதாகும்...

தவறானாலும் சரியானாலும் ஆச்சாரியார் மீது ஒரேவித நம்பிக்கை வைத்திருந்தார் கல்கி. ஆசை கண்ணை மறைக்கும் என்பது போல், அந்தப் பக்தி கல்கியின் உள்ளத்தையே மூடி விட்டது. அதனால் அவர் பெற்ற ஏச்சும் பேச்சும் ஏராளம். எனினும் அவைகளையெல்லாம் தனது குருநாதருக்காகத் தான் தாங்கிக் கொள்ளும் கணைகள் என்று மகிழ்ச்சியாகவே ஏற்றுக் கொண்டார். ஏகலைவன் விசுவாசம்! பழி கல்கிக்குத்தான். அதனால்தான், அன்பர் ஆச்சாரியார் அவர்கள் இடுகாட்டில் கண்ணீர் வடித்தாராம்!...

தேசியக் கூடாரம் முழுவதும் எரிச்சல் கணைகளைப் பூட்டினாலும், சில சமயங்களில் நமது சேவைகளை அவர் புகழ்ந்ததும் உண்டு. எழுத்துத் துறையில் நமது இயக்கம் உண்டாக்கியிருக்கும் மறுமலர்ச்சி, பல தேசிய எழுத்தாளருக்கு எரிச்சலையும் கோபத்தையும் உருவாக்கி யிருக்கிறது; ஆனால், கல்கி வரவேற்றார், மகிழ்ந்தார். அதே போல, மாற்றாரிடம் இருக்கும் சில நற்பண்புகளை அவர் பாராட்டத் தயங்கியதில்லை! வாழ்த்தப் பயந்ததில்லை! இதனால்தான் அவருடைய மறைவு, இன்று பலருக்கும் வருத்தத்தைக் கொடுக்கிறது. அதிலும், எரிச்சல் எனும் புகை மண்டலத்தின் மத்தியிலே மிதக்கும் நமக்கு, அவரது மறைவு உண்மையில் வேதனையைத் தருகிறது!

இன்னும் ஓர் உதாரணம், ''தென்றல்'' 11–12–54 இதழில், அதன் ஆசிரியர் கண்ணதாசன் எழுதியது. (அப்போது அவர் தி. மு. க.வைச் சார்ந்திருந்தார்; அவரே பின்னர் சொன்ன படி ''வனவாசம்'' செய்து கொண்டிருந்தார்.) ''மாற்றான் தோட்டத்து மலராயினும் மணம் தந்த மலரே!'' என்ற மகுடம் கொண்ட முதல் பக்கக் கட்டுரை அது:

கட்சி — இனப் பாகுபாடற்று, எழுத்தாளர் சாதி என்கிற கண்ணோட்டத்தோடு பார்க்கும் போது, ஒரு நல்ல எழுத்தாளர் மறைந்தார் என்கிற துக்கம் நமக்கு மேலிடுகிறது. அவர் தம் கூடாரம் எதுவாயினும், அவர் தம் கொள்கை எத்தகையதாயினும், அவரது எழுத்துக்களிலே ஒரு தனித் தன்மை இருந்ததை யாரும் மறுக்க முடியாது. தமிழ் வசன நடையில் அவர் கைக்கொண்ட முறை அவருக்கே உரியது...

அவரது மறைவு கேட்டதும், அவர் எழுதிய நடை முடிந்து விட்டதே என்கிற கவலைதான் எழுத்தாளனாகிய எனக்கு ஏற்பட்டது. அவரது கருத்துக்கள் பல நமக்கு ஏலாதவை, முரண்பட்டவை. ஆயினும் அவர் நல்ல எழுத்தாளர்.

அவரது அரசியல் விமரிசனங்கள் பல, பலருக்குப் பிடிக்காதவை; ஆயினும் அவர் உறுதியான விமரிசகர்.

அவரது எழுத்தின் போக்கும் நோக்கமும் திடீர் திடீரென்று தலைகீழாக மாறியதுண்டு; ஆயினும் அது, அவர் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றிய ஒருவருக்காக நடந்தது.

இனி, கல்கி முதன் முதலில் வெகுவாகப் பெருமை அளித்ததும் அடைந்ததுமான ஆனந்த விகடன், அவருக்கு எவ்வாறு புகழஞ்சலி செலுத்திற்று என்பதைப் பார்ப்போம்.

கல்கியின் மறைவை அடுத்த 12ம் தேதிய விகடன் இதழ், அவருடைய முகத் தோற்றம் பொறித்த அட்டையுடன் வெளி வந்தது. உள்ளே, ''அன்னையின் கண்ணீர்'' என்ற மகுடத்துடன் தலையங்கம்:

ஆசிரியர் கல்கியின் மறைவால், தமிழ் அன்னை தனது அரிய பெரிய செல்வம் ஒன்றையே இழந்து விட்டாள்....

தமிழ் மக்களும், தமிழர் பண்பாடும் சிறப்புற வேண்டுமானால், உலகெல்லாம் தமிழ் ஆர்வம் பரவும் வகை செய்தல் வேண்டும் என்ற பாரதியின் ஆவலைக் கல்கி பூர்த்தி செய்து வந்தார்...

பண்டித நடை காரணமாகத் தமிழ் படிக்கவும் தமிழில் பேசவும் அஞ்சியவர்களையும், ஆங்கிலம் காரணமாகத் ''தமிழில் இயலுமா?'' என்று கேட்டவர்களையும், ஒருங்கே தமிழார்வம் கொள்ளச் செய்து விட்டது கல்கியின் வசன நடை...

---



**சாதனை!**

பீகாரிலுள்ள சுமார் இருபது பள்ளிக்கூடங்கள் ஒரு சாதனையைச் செய்திருக்கின்றன. கடந்த மூன்று வருடங்களாகத் தொடர்ந்து நூற்றுக்கு நூறு பள்ளி இறுதி ஆண்டு தேர்வில் தோல்வியைப் பெற்றிருக்கின்றன. ஒரு மாணவன் கூட தேறவில்லை. இண்டியன் நேஷன் - சாமி

# லக்மே லவெண்டர் டால்க்

## கொஞ்சி மணக்கும்...
## பிரெஞ்சு மயக்கம்.

தரித்துக் கொள்வீர்
லக்மே லவெண்டர் டால்க்.
பூத்த புது பிரெஞ்சு
லவெண்டர் பூக்களின்
நேர்த்தியான மணம்.
லக்மே லவெண்டர் டால்க்

**உங்கள் எழில்:**
**எங்கள் தொழில்.**




dCAIL-VC-LT/1N TAM.

# அமோக பரிசுகள் கார்பொரேஷன் பாங்கின் பவழ விழா ரொக்கப் பத்திரங்களை இன்றே வாங்குங்கள்

கார்பொரேஷன் பாங்கின் பவழ விழாப் பத்திரம் தனிச் சிறப்பு வாய்ந்தது. இதுவரை நீங்கள் கண்டிராத மூன்று ஒப்பற்ற அம்சங்களைக்கொண்ட ஒரே பத்திரம். கவர்ச்சி மிக்க ரொக்கப் பரிசுகள். அன்பளிப்புச் சீட்டுகள். ஆண்டு ஒன்றுக்கு 10 சதவிகித வட்டி.

*ரொக்கப் பரிசு விவரங்கள்:*

**1 முதற் பரிசு - ரூ. 1 லட்சம்**

| | | | |
|---|---|---|---|
| 5 | இரண்டாவது பரிசுகள் | ரூ. 25,000 | ஒவ்வொன்றும் |
| 100 | மூன்றாவது பரிசுகள் | ரூ. 1,000 | ,, |
| 1000 | நான்காவது பரிசுகள் | ரூ. 100 | ,, |
| 1500 | ஆறுதல் பரிசுகள் | ரூ. 50 | ,, |

**1** 61 மாதங்களுக்கு ரூ. 500 முதல் அதன் மடங்குகளில் பத்திரங்கள் வழங்கப்படுகின்றன. ரூ. 500 மதிப்புள்ள பத்திரம் கால முடிவில் ரூ. 755 பெறுமானம் அடைகிறது.

**2** ரூ. 500 முதலீட்டுப் பத்திரத்திற்கு ஒரு அன்பளிப்புச் சீட்டு வழங்கப்படும். ரூ. 5,000 முதலீட்டுப் பத்திரத்திற்கு 10 அன்பளிப்புச் சீட்டுகள் கொடுக்கப்படும். இந்தச் சீட்டுகளை வங்கியினர் அங்கீகாரம் பெற்ற கடைகளிலோ சிறப்பு அங்காடிகளிலோ கொடுத்து சீட்டுகளின் மதிப்புக்குத் தகுந்த பொருள்களை வாங்கிக் கொள்ளலாம்.

**3** 1977 ஜூலை 31க்குப் பிறகு வங்கியாரால் குலுக்கல் தேதி அறிவிக்கப்படும். இந்தத் தேதிக்கு முன்னர் வாங்கப்பட்ட பத்திரங்கள் மட்டுமே குலுக்கலில் இடம் பெறும். குலுக்கலுக்கு ரூ. 500 மதிப்புள்ள பத்திரம் ஒரு எண்ணாகவும் ரூ. 5000 மதிப்புள்ள பத்திரம் 10 எண்ணுகவும் கருதப்படும்.

*மற்ற விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள எங்கள் கிளை வங்கியை அணுகுங்கள்.*



ESTD. 1906

**கார்பொரேஷன் பாங்க் லிமிடெட்**

*—சிநேக மனப்பான்மையுடன் விளங்கும் வங்கி*




பதிவு அலுவலகம்: உடுப்பி | தலைமைச் செயலகம்: மங்களூர் | தலைமை இயக்குனர்: N. N. பை

mas / CBL / 149 / TAM

இந்தத் தலையங்கத்துடன், எஸ்.எஸ். வாசன் ஒப்பமிட்ட ''உபயகுசலோபரி'' ஒன்றும் அந்த இதழில் வந்தது. ''மனம் செறிந்த துயரத்துடன் இன்று நேயர்களுக்கு எழுதுகிறேன்'' என்று தொடங்கிய அந்த நேர் உரையின் பகுதிகள் சிலவற்றை முன்பே அங்கங்கே பார்த்தோம். இப்போது மற்றப் பகுதிகளிலிருந்து சில வாக்கியங்கள்:

இந்தத் துயரச் செய்தியைக் கேட்டது முதல் நேயர்களின் மனம் என்ன பாடுபடும் என்பதை நான் நன்கு அறிவேன். கல்கியுடன் மிகவும் நெருங்கி அதிக காலம் பழகிய சிலரில் நான் ஒருவன் என்னும் போது, தமிழ் இலக்கியத்துக்கும், எழுத்துலகத்துக்கும், கலைவளர்ச்சிக்கும், ரஸ அனுபவத்துக்கும், இதைவிட மகத்தான துரதிர்ஷ்டம் ஏற்பட முடியாது என்றே நினைக்கிறேன். இந்த அதிர்ச்சியைப் போல் தமிழர் சமூகத்திற்கு, பொது வாழ்விலே ஈடுபட்ட வேறு எவருடைய மறைவும் கொடுத்ததில்லை...

கல்கியின் உள்ளக் கோயிலிலே ராஜாஜி இடம் பெற்றார். என்றும் அவருடைய பணியிலே தமது நெறியை இறுத்தினார். ''சத்திய சோதனை''யை மொழி பெயர்த்துத் தமது இதயத்தை மகாத்மா காந்திக்கு அர்ப்பணம் செய்தார். காந்திஜியின் இலட்சியங்களைப் பரப்புவதில் கல்கியின் ஈடுபாட்டைத் தமிழ் நாடு அறியும்; அவர் மகத்தான தொண்டையும் போற்றும். காங்கிரஸிற்குத் தென்னாட்டிலே கிடைத்த அமோகமான செல்வாக்குக்கு, காங்கிரஸ் தலைவர்களுக்குத் தமிழர்கள் கொடுத்த ஸ்தானங்களுக்கு, கல்கியின் பேனா, வேறு எவரும் உழைத்திராத சிறப்புடனும், வேகத்துடனும், சக்தியுடனும், ஒளியுடனும் உழைத்தது....

(இதே) ''உபயகுசலோபரி''யில் கல்கி உரையாடி, வாசகர் ஒவ்வொருவரையும் விகடனுடைய உறவாக்கிக் கொண்டார் என்பதையும், இன்றைய நிலையிலே விகடனின் தொடர்ந்த செல்வாக்குக்குக் கல்கியின் மேதையும் சேவையுமேதான் காரணம் என்பதையும் நான் பெருமையுடன் கூறுகிறேன்.

இவ்வாறு பெருமையுடன் கூறியதுடன், தமது பத்திரிகையை எவ்வாறு கல்கி வளர்த்துச் சிறப்புறச் செய்தார் என்பதற்கு எடுத்துக் காட்டாக, அவருடைய இலக்கியப் படைப்புக்களை விகடன் இதழ்களில் ஓராண்டு காலம் தொடர்ச்சியாய் வெளியிட்டார் வாசன். ''கல்கி வளர்த்த தமிழ்'' என்பது அத்தொடரின் தலைப்பு.

அடுத்து முக்கியமாகக் கவனிக்க வேண்டியது சதாசிவம் எவ்வாறு தமது நண்பரின் நினைவைப் போற்றி அவருடைய உயரிய இலட்சியங்களையும், அரும் பணிகளையும் தொடரச் செய்தார் என்பதேயாகும்.

கல்கியின் மறைவினால் அவர் அதிர்ச்சியடைந்து, துக்கமுற்றிருக்கையில், நெடுகிலுமிருந்து அனுதாபம் தெரிவித்து வந்த நூற்றுக் கணக்கான தந்திகளும் ஆயிரக் கணக்கான கடிதங்களும் அவருக்கு ஓரளவு ஆறுதல் அளிக்க உதவின. அவற்றை அனுப்பியவர்களில் பலர் கல்கிப் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். சென்னையிலும், ராஜாஜியும், மற்றும் வேண்டியவர்களும் அவ்வாறே வற்புறுத்திக்கொண்டிருந்தார்கள். அந்த வற்புறுத்தல், ஆதரவுக்கு அடையாளமாயும் வாக்குறுதியாயும் இருந்ததால், மலைப்பிலிருந்தும், சந்தேகத் தயக்கத்திலிருந்தும் சதாசிவம் விடுபட்டு, கல்கியும் தாமும் சேர்ந்து தொடங்கிய ஒன்றைத் தனியே தொடர்ந்து நடத்தத் தீர்மானித்தார். தீர்மானித்தவுடனேயே கூடுதலான பொறுப்புக்களைத் தாம் மேற்கொண்டும், கல்கியிடம் பயிற்சி அடைந்தவர்களிடம் பகிர்ந்தளித்தும், தீவிரமாய்ச் செயல்படலானார்.

டிசம்பர் பத்தொன்பதாம் தேதியக் ''கல்கி''யில் அந்தத் தீர்மானத்தை முறைப்படி சதாசிவம் அறிவித்தார்:

அன்னாருடைய ஆத்ம சாந்திக்குப் பிரார்த்திப்பதோடு, அவருடைய ஜீவனாக இன்று நம்மிடையே நிற்கும் இந்தப் பத்திரிகையை மேலும் மேலும் வளர்ப்பதே, அவருடைய இணைபிரியா நண்பன் என்ற முறையில் நான் செய்யக்கூடிய சேவை என்று கருதுகிறேன். இந்தச் சேவையில் நேயர்கள் அனைவருடைய நல்லெண்ணமும் பூரண ஆதரவும் எனக்கு மேலும் மேலும் கிட்டும் என்று எதிர்பார்ப்பதோடு, அந்த ஆதரவை என் சார்பிலும் மறைந்து சென்ற என் நண்பரின் சார்பிலும் வேண்டிக் கொள்கிறேன்.

அவர் வேண்டியபடியே, அவர் எதிர்பார்த்ததற்கும் அதிகமாகவே ஆதரவு கிடைத்தது.

## விளம்பரம்

''ரமேஷுக்கு, நீ பெயிலாகிவிட்டதால், அப்பாவின் கோபத்துக்குப் பயந்து ஓடி விட்டிருக்கிறாய். உடனே திரும்பி வா. உனது அப்பா உன்னை அடிக்க மாட்டார். ஏனென்றால் ஆபீசில் நடந்த டிபார்ட்மெண்ட் பரீட்சையில் உனது அப்பா பெயிலாகி விட்டார் - அம்மா.'' -ராஜமோகன்

பள்ளிக்கூட ஆசிரியர்கள், மாணவர்களைத் தங்களுக்குச் சம வயதுள்ளவர்களாகக் கருதிப் பழகவேண்டும்; அதே சமயத்தில் அவர்கள் பெரிய மனுஷத்தனத்தோடு நடந்து கொள்வார்கள் என எதிர்பார்க்கக் கூடாது.

ரோவர் — ராமு



---

அந்த அறிவிப்பு வெளியான ''கல்கி'', அமரரான ஆசிரியரின் பெருமைக்கு ஏற்றதோர் அஞ்சலி மலராக இருந்தது: பரிவுச் செய்திகள், பாராட்டுக் கட்டுரைகள், கல்கியின் எழுத்து வண்ணங்கள், அவர் கலந்து கொண்ட வெவ்வேறு நிகழ்ச்சிகளின் படங்கள் முதலியன அதில் நிறைந்திருந்தன. அதன் அட்டையில், அமரப் புகழொளியுடன் திகழ்வதாய்ச் சந்திரா வரைந்த கல்கியின் உருவம்.

அந்த மலருக்கு அடுத்த இதழில் ஒரு சிறப்பு. கல்கியின் மறைவினல் இருபத்தாறும் அத்தியாயத்துடன் நின்று போன அவருடைய ''அமரதாரா''வை அவர் எழுதி வைத்திருந்த குறிப்புகளின் துணைக் கொண்டு, அந்த இதழிலிருந்து ஆனந்தி, தொடர்ந்து எழுதலானார். சதாசிவம் அளித்த தூண்டுதலினலும், ராஜாஜி வழங்கிய ஊக்கத்தினலும் அந்தப் பணியைக் கல்கியின் குமாரி மேற்கொண்டார். ''தமிழன்னையின் அருளும், என் தந்தையின் ஆசியும் இந்தப் பணிக்கு வேண்டிய தைரியத்தை எனக்கு அளிக்க வேண்டும்'' என்ற பிரார்த்தனையுடன் அந்தத் தொடங்கினர் அவர். அவ்வாறு தொடங்கியதை வெகுவான வெற்றியுடன் அவர் நிறைவேற்றி, வாசகர்களின் பெருவாரியான பாராட்டைப் பெற்றார்.

''அமரதாரா'' நாவலில் மூன்றில் இரு பங்கை ஆனந்தி நிறைவு செய்தது, தந்தைக்கு அவர் செலுத்திய தக்கதோர் அஞ்சலி என்பதோடு அரியதோர் இலக்கிய சாதனையுமாகும்.

முன்பே சொன்னபடி கல்கிப் பத்திரிகையில் ஆசிரியராய் நியமிக்கப் பெற்ற மீ. ப. சோமு, அப்பதவியிலிருந்த பதினெட்டு மாத காலத்தில் கல்கிக்கு அஞ்சலி செய்தும், அவருடைய சாதனைகளை மதிப்பிட்டும் அடிக்கடி எழுதினர். அவ்வகையில் அவர் முதலாவதாக எழுதியது பேராசிரியரின் மறைவை அடுத்து, டிசம்பர் 12ம் தேதியக் ''கல்கி'' இதழில் வெளியான தலையங்கம். ''என்றும் நிற்கக்கூடிய தமிழை எழுதிய கை நின்றுவிட்டது! மறையாத எழுத்தின் நாயகம் மறைந்துவிட்டது!'' என்ற வாக்கியங்களுடன் ஆரம்பமான அந்த அஞ்சலி உரையில் சோமு வெளியிட்ட உணர்ச்சி, பொதுவாகத் தமிழ் அன்பர்கள் எல்லோருடைய உணர்ச்சியையுமே பிரதிபலிப்பதாய் இருந்தது.

அச்சமயத்தில், தமிழ் நாடு நெடுகிலும், வெளியே தமிழர் வசிக்கும் ஊர்கள் எல்லாவற்றிலும் இரங்கல் கூட்டங்கள் அடுத்தடுத்து நடந்தவண்ணம் இருந்தன. எண்ணிச் சொல்ல முடியாதபடி அத்தனை கூட்டங்கள்!

அவற்றுள் மிகப் பெரிது, அம்மாதம் 17ம் தேதி மாலை, சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்ற கூட்டம். அந்த மண்டபம் நிறைந்து, சுற்றுத் தாழ்வாரங்களும் நிறைந்து, அவற்றின் படி வரிசையிலும்; தரையிலும் கூட குழுமி இருந்தார்கள் கல்கி அன்பர்கள். கடற்கரையிலேயே அக் கூட்டத்தை நடத்தி யிருக்கலாமே என்பதாக, அதற்கு ஏற்பாடு செய்தவர்கள் பின்னர் குறைப் பட்டுக் கொண்டார்களாம். தமிழ் எழுத்தாளர் சங்கம், பத்திரிகையாளர் சங்கம், கம்பர் கழகம், நாடகக் கழகம், தேசிய இளைஞர் காங்கிரஸ்—இவை ஐந்தும் சேர்ந்து நடத்திய கூட்டம் அது.

ராஜாஜி, ம. பொ. சி., செட்டி நாட்டு அரசர் முத்தையா செட்டியார், நாமக்கல் கவிஞர், கி.வா. ஜகந்நாதன், பேராசிரியர் சேதுப்பிள்ளை முதலானோர் பேசிய அந்தக் கூட்டத்துக்கு, எஸ். எஸ். வாசன் தலைமை வகித்தார். அந்தக் கூட்டம் பற்றிய விவரம் மறுநாள் காலை, ''தினமணி''யில் ஆறு முழுப் பத்திகளில் வெளியாயிற்று.

இத்தகைய அஞ்சலிக் கூட்டங்களையடுத்து, பல ஊர்களிலும் பல்வேறுஇடங்களிலும் படத் திறப்பு விழாக்கள் நடைபெற்றன. மாதிரிக்கு அவற்றில் சில—

கல்கி சிறுவனாய் இருக்கையில் சிறிது காலம் படித்த மாயூரம் நகர சபைப் பள்ளியில் அன்னாரின் உருவப் படத்தை அதே பள்ளியில் பயின்று பின்னர் அவருடைய சகாவாய்ப் பணியாற்றிய துமிலன் திறந்து வைத்தார். சந்தர்ப்பம்—அந்தப் பள்ளியின் எழுபத்தைந்தாவது ஆண்டு விழாவை யொட்டி நடந்த பழைய மாணவர்கள் தினக் கொண்டாட்டம்.

இந்திய இளைஞர் சங்கத்தின் சார்பில், சென்னை கோகலே மண்டபத்தில் படத் திறப்பு. திறந்து வைத்த நீதிபதி



பம்பாயின் ப்யூட்டி ஸலோன் 'மனீஸே'யைச்
சேர்ந்த திருமதி டி. கன்ட்ராக்டர் கூறுகிறார்:

''க்ளீம் ஷாம்பு உபயோகித்த பிறகு, கேசத்தை
நன்றாகக் கட்டுப்படுத்த முடிகிறது என்னும்
நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. க்ளீம் தரும் வளம்
மிக்க நுரையினால் கேசத்தை நன்கு சுத்தப்படுத்தவும்,
பட்டுப்போன்று மிருதுவாக வைக்கவும் முடிகிறது.
எனவே கேசம், நாம் விரும்பும்படி அலங்கரிக்க,
இழைந்து கொடுக்கிறது. என் வாடிக்கையாளர்களுக்கு
க்ளீம் ஒரு சிறந்த ஷாம்பு—எனக்கும் கூடத்தான்.
தவிர, இதன் பிரெஞ்ச் மணம் மனதைக் கவர்கின்றது.''

# சிறந்த கூந்தல் அலங்கார நிபுணர்கள் சிபாரிசு செய்வது க்ளீம் ஷாம்பு



**பட்டுப்போல், சுத்தமான,
படியும்படியான கேசம் பெற்றிட.**






## க்ளீம் ஷாம்பு

சிறந்த கூந்தல் அலங்கார
நிபுணர்கள் சிபாரிசு செய்வது.

உயர்ந்த பட்ச விலை
100 மி.லி. ரூ. 7.40
200 மி.லி. ரூ. 12.20
400 மி.லி. ரூ. 21.70
வரிகள் தனி.

Geoffrey Manners & Co. Ltd.

எஸ். மகாராஜன் கல்கியின் தமிழ் நடையில் உள்ள நயங்களைப் பற்றிச் சிறப்பாகப் பேசினார். தலைமை வகித்த ராஜாஜி, அந்த மண்டபத்தில் கொலுவிருக்கும் பெரிய தேசியத் தலைவர்களின் உருவங்களுக்கிடையே கல்கியின் படம் இடம் பெற்றது குறித்து மகிழ்ச்சி தெரிவித்தார். (இதே மண்டபத்தின் நூலகத்தில் இன்னும் பேரெடுக்காத ஓர் எழுத்தாளராய் அடிக்கடி கல்கி அமர்ந்திருந்து தமது அறிவைப் பெருக்கிக்கொண்டதுடன், ''நவசக்தி''க்காக ''சத்திய சோதனை'' மொழி பெயர்ப்பு வேலையையும் செய்தார் என்பதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.)

பலமுறை கல்கி பேசியதும் தலைமை வகித்ததுமான மகாஜன சபா மண்டபத்தில் தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்கென ''சுதேசமித்திரன்'' ஆசிரியர் ஸி. ஆர். ஸ்ரீநிவாசன் படத் திறப்பு நிகழ்த்தினார்.

எட்டயபுரத்தில், பாரதி மண்டபம் எழுப்பியவருக்கு நன்றிப் பாராட்டாக அதே மண்டபத்தில் அவருடைய படத் திறப்பு — கல்கி காலமானதற்கு அடுத்த ஆண்டில், என். எஸ். கிருஷ்ணனின் பொறுப்பில் நடந்த பாரதி விழாவில் படத்தைத் திறந்து வைக்கும் பெருமையைத் தமிழ்ப் பேராசிரியர் கு. அருணைசலக் கவுண்டர் அடைந்தார். அந்த விழாவின் முதல் நிகழ்ச்சியாக, யானை மீது வைத்த கல்கி படத்தின் ஊர்வலம் ஒன்று நடந்தது.

(பின்னர் 1958ல் கல்கியின் வர்ணப் படம் ஒன்றையும் அதே மண்டபத்தில் எஸ். எஸ். வாசன் திறந்து வைத்தார். சிவாஜி கணேசன் நடத்திய பாரதி விழா அது.)

இவ்வாறு பட உருவில் நெடுகிலும் கல்கி பதிந்து கொண்டிருக்கையில் கவிஞர் எஸ். டி. சுந்தரம், அன்னாரின் முகச் சிலை ஒன்றைச் செய்வித்து அன்னார் தலைவராய் இருந்து பேணிய தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்கு வழங்கினார். கல்கியின் முதல் நினைவு நாள் கொண்டாட்டம் ஒன்றில் அப்போதைய சங்கத் தலைவர் ம. பொ. சிவஞானம் அச் சிலையைத் திறந்து வைத்தார்.

கல்கியின் நினைவையும் அவருடைய கடவுள் பக்தியையும் ஒருங்கே போற்றும் விதத்தில், பழனி மலையிலும், திருநீர் மலையிலும் அவர் பெயரிலே படி மண்டபங்களைச் சதாசிவம் கட்டுவித்ததை இங்கே குறிப்பிடலாம்.

கல்கி நினைவு நிதி ஒன்றை ஸி. ஆர். ஸ்ரீநிவாசன் திரட்டினார். எஸ். எஸ். வாசனின் தாராளமான பத்தாயிரம் ரூபாய் நன்கொடை உள்பட, மொத்தம் அதில் இருபத்தாறாயிரம் ரூபாய் சேர்ந்தது. அந்தத் தொகையை ராஜாஜியின் யோசனைப்படி கல்கி நினைவு அறக் கட்டளை ஒன்றை நிறுவும் வகைக்காகச் சென்னை பல்கலைக் கழகத்திடம் ஸ்ரீநிவாஸன் ஒப்படைத்தார். அந்தக் கட்டளையின்படி தற்காலத் தமிழ் இலக்கியம் பற்றி ஆண்டுதோறும் கல்கி நினைவுச் சொற்பொழிவுகள் நடந்து வருகின்றன. முதலாவது சொற்பொழிவுத் தொடரை 1963ல் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் நிகழ்த்தினார். அடுத்தடுத்த ஆண்டுகளில் நிகழ்த்தியவர்களில் சிலர்: கி. வா. ஜகந்நாதன், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர் ந. சஞ்சீவி, ம. பொ. சி., சோமலே. (சொற்பொழிவாளருக்குச் சன்மானம் ஆயிரம் ரூபாய்.)

தமது தமிழ்ப் பணிகளில் மிகச் சிறந்ததாக எந்த நூலைக் கல்கி கருதி, ''மிக்க பணிவுடனும் பெருமிதத்துடனும் தமிழ் மக்களுக்குச் சமர்ப்பணம் செய்தாரோ அந்த நூலான ''அலை ஓசை''க்கு, சாகித்திய அகாதெமி பரிசு வழங்கிற்று— பரிசுத் திட்டம் தொடங்கிய இரண்டாவது ஆண்டான 1956ல். தமது தாயாருடன் ராஜேந்திரன் டெல்லிக்குச் சென்று அந்தப் பரிசுக்கு உரிய பளிங்குப் பட்டயத்தையும் ஐயாயிரம் ரூபாய் வெகுமதியையும் உபராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணனின் ஆசியுடன் ஏற்றுக் கொண்டார்.

அந்தப் பரிசளிப்பை, ஓர் இலக்கிய எழுத்தாளராய் வாழ்நாளிலேயே கல்கி அடைந்துவிட்ட அங்கீகாரமும்

**போன பிறவியில் ஷைலாக்?**



மரண தண்டனை விதிக்கப்பட்ட ஒரு கைதி, தம் இருதயத்தை இன்னொருவருக்குப் பொருத்தச் சம்மதித்தார். அனைவரும் அவருடைய தியாகத்தைப் பாராட்டியபோது அவருக்கு எதிராக வாதாடிய வக்கீல் மட்டும் எதிர்த்தார். காரணம்? ''இவருடைய இதயம் இன்னொருவர் உடலில் துடித்து கொண்டிருக்கும்போது, இவருக்கு மரண தண்டனை நிறைவேறியது என்று எப்படிக் கூறமுடியும்?''

—ஆர். எம்.



குமாரி பூர்ணிமா ஜெயராமின் பரத நாட்டியஅரங்கேற்றம் அண்மையில் நடந்தது. அவரது தேர்ச்சி கண்டு குழுமியிருந்த யாவரும் பாராட்டினர். பம்பாய் ஸ்ரீ ராஜராஜேச்வரி பரத நாட்டிய கலா மந்திருக்குப் பெருமை சேர்க்க மேலும் ஒரு நாட்டிய மணி தோன்றி விட்டார் என்பதே அனைவர் அபிப்பிராயமாகவும் இருந்தது. பயிற்சி கொடுத்த ஆசிரியர் திரு நாகராஜன் தமது மாணவிக்காகப் பெருமைப் படலாம்.

புகழும் அவரது மறைவுக்குப் பின்னர் உறுதிப்பட்டு ஓங்கியதற்கு ஓர் எடுத்துக் காட்டாய்க் கொள்ளலாம்.

புகழுடன் பொருளையும் ஈட்டினார் கல்கி என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் எவ்வளவு என்பதை ஊகமாகவே, பொதுவாக மிகையாகவே பலரும் மதிப்பிட்டு வந்திருக்கிறார்கள். ஓரளவு சரியான மதிப்பீட்டுக்காக அவருடைய உயிலின் விவரங்களைப் பார்க்கலாம்.

அதில் மனைவிக்காக அவர் எழுதி வைத்தது, பத்தாயிரம் ரூபாய் பெறுமானம் கொண்ட ஓர் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி.

மகளுக்கு மொத்தம் அதே பெறுமானமுள்ள இரண்டு பாலிஸிகள்; காந்தி நகர் இரட்டை வீடு (பெறுமானம் சுமார் அறுபதாயிரம் ரூபாய்).

மகனுக்குச் சொந்தக் கிராமத்தில், பூர்வீக நிலங்களையும் சேர்த்து ஏழு ஏக்கராக்கள்; மற்றொரு கிராமத்தில் நாலு ஏக்கராக்கள்; கஸ்தூரிபாய் நகரில் ஒரு மனை. (மொத்தப் பெறுமானம் நாற்பதாயிரம் ரூபாய்) மற்றும், கல்கி பத்திரிகையில் அவருடைய பங்குகள்; அவருடைய நூல்களின் ராயல்டி உரிமை. எல்லாவற்றையும் அந்தக் காலத்துப் பண மதிப்பின்படி கணக்கிட்ட பின்பும், ''இவ்வளவுதானா கல்கி சேர்த்துவைத்தது?'' என்று, அவருடைய சேமிப்பை மிகையாக மதிப்பிட்டவர்கள் கேட்கலாம். சொந்த சௌகரியங்களுக்காகவும், குடும்ப நலனுக்காகவும் அவர் நிறையச் செலவு செய்தார் என்பதையும், உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் தாராளமாய்ப் பண உதவி செய்தார் என்பதையும் சுட்டிக் காட்டி இதற்குச் சமாதானம் கூறலாம்.

அவர் சேர்த்து வைத்தது அதிகமானதல்ல என்று கருதினாலும், அவர் சம்பாதித்தது அதிகமே. அந்தச் சம்பாத்தியம் எழுத்து வன்மையால் அடைந்ததேயாயினும், எழுத்தாளராக மட்டுமே இருந்து அடைந்ததல்ல என்ற உண்மையை இங்கே சொல்லவேண்டும். ஒரு பத்திரிகாசிரியராய்ப் பதவி வகித்து உயரிய விகிதத்தில் சம்பளம் பெற்று வந்ததால்தான் பெரும்பாலும் அடைந்ததாகும் அது. கல்கிப் பத்திரிகையின் தொடக்கத்தில் இருநூறு ரூபாயாய் இருந்த அவருடைய மாதச் சம்பளம் இரு மடங்கு, மும்மடங்காகப் பெருகி, மூன்றாண்டுகளில் ஆயிரமாக உயர்ந்தது; அதே விதமாய்ப் பின்னரும் பெருகி, கடைசி ஆண்டுகளில் இரண்டாயிரத்து ஐந்நூறாக நிலைத்தது.

தமது குடும்பத்துக்குக் கல்கி எழுதி வைத்த சொத்தைக் குறைவானதாய்க் கருதினாலும் சரி, கணிசமாய்க் கருதினாலும் சரி, ஒரு மதிப்புக்குள் அடங்கக் கூடியதே அது.

மதிப்புக்கு அடங்காத சொத்து ஒன்றை நம் எல்லோருக்கும் வழங்கி இருக்கிறார் அவர் — அதுதான் அவர் படைத்ததான இலக்கியச் செல்வம்.

குறைவிலா இச் செல்வத்தில் அவர் நிறைவாக வாழ்கிறார்; இச்செல்வத்தை அனுபவிப்போரின் இதயங்களில் வாழ்கிறார்; அவருடைய வழியிலே நடக்கும் இலக்கியப் பரம்பரையில் வாழ்கிறார்.

அவர் இயற்றிய பாடல்களில் இழைந்து வாழ்கிறார்.

அவர் பேணிய கலைகளில் கலந்து வாழ்கிறார்.

அவர் ஆற்றிய பணிகளின் பலன்களிலும், அமைத்த சின்னங்களின் பெருமையிலும் வாழ்கிறார்.

அவர் போற்றிய நெறிகளிலும் பயின்ற பண்புகளிலும் வாழ்கிறார்.

இப்போதுபோல் இனியும் வாழ்வார். பொன் மயமாய்ப் பல்லாண்டு நிலைத்திருப்பார் பொன்னியின் புதல்வர்!

முற்றிற்று

---




ஒரு நூலக அதிகாரி ஓய்வு பெற்றார். அவருடன் பணிபுரிந்த சக ஊழியர்கள், அவருக்குப் புத்தகம் போன்ற அமைப்புடைய வெள்ளிப் பெட்டி ஒன்றைப் பரிசாகக் கொடுத்தார்கள். அதில் இப்படி எழுதியிருந்தது: 'உஷ்!'

நியூஸ் வொர்ல்ட் —முத்து

## பிரபல திருமணம்



சென்னை, மயிலாப்பூர் "சுந்தரம்" லஸ் அவென்யூவிலுள்ள ஸ்ரீ T. S. முத்துசுவாமி ஐயர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி : M. ராஜகோபால் B. E. (MECH) (Design Engineer, S. R. P. Tools Ltd., Ranipet) அவர்களுக்கும், புது டில்லி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க், ரீஜினல் ஆபீஸ் மானேஜர், ஸ்ரீ T. L. ராமமூர்த்தி அவர்களின் குமாரத்தி சௌ. பத்மா B.A. வுக்கும், 2-6-1976 அன்று சென்னை லாயிட்ஸ் ரோடு, ஹேமமாலினி கல்யாண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

## குடும்ப டாக்டர்:

# கன்னம் வீங்குவது பொன்னுக்கா?

**ப**த்து வயதுப் பையனை அழைத்து வந்த பெண்மணி கூறினார்:

''இவனுக்கு நாலு நாட்களாகக் கடுமையான காய்ச்சல் இருந்தது. இப்போதும் ஜுரம் இருக்கிறது. இன்று காலையில்தான் வலது கன்னம் வீங்கியிருப்பதைக் கண்டேன். இது 'பொன்னுக்கு வீங்கி'யாய்த்தான் இருக்கும் என்று நினைத்தேன். பக்கத்து வீட்டுப் பெண்மணியிடம் ஒரு பவுன் சங்கிலியை இரவல் வாங்கிப் பையன் கழுத்தில் போட்டிருக்கிறேன். காய்ச்சல் குறைய உங்களிடம் மருந்து ஏதாவது வாங்கிக் கொண்டு போகலாம் என்று அழைத்து வந்தேன்.''

பையனைச் சோதித்தவாறு, ''வீடு எங்கே இருக்கிறது? நடந்தா வந்தாய்?' என்று கேட்டேன்.

''அரை மைல் தூரம் இருக்கும். சைக்கிள் ரிக்ஷாவில் அழைத்துக் கொண்டு வந்தேன்'' என்றார் பையனின் அன்னை.

''நல்லது. பையனை இனிமேல் இங்கு அழைத்து வர வேண்டியதில்லை. இரண்டு, மூன்று நாட்களில் குணமாகி விடும். மருந்து எழுதிக் கொடுக்கிறேன். பையன் நடமாடவே கூடாது. காய்ச்சல் குறைந்து விட்டதே என்று எழுந்து விளையாடப் போய் விடப் போகிறான். இன்னும் ஒரு வாரமாவது அவனைப் படுக்கையிலேயே இருக்கச் சொல்ல வேண்டும்'' என்று எச்சரித்து அனுப்பினேன்.



வைரஸ் கிருமிகள் பாக்டீரியாவைவிட மிகச் சிறியவை. அவற்றின் அமைப்பை அறிய எலெக்ட்ரான் மைக்ரோஸ்கோப் உதவுகிறது. இது ஆராய்ச்சிக்குரிய பொருளை மிகச் சக்திவாய்ந்த சாதாரண மைக்ராஸ்கோப்பைவிட ஆயிரம் மடங்கு பெரிதாக்கிக் காட்டும்; புகைப்படமும் எடுத்துவிடும். வைரஸின் நுண் அமைப்பை அறிவதால் தடுப்பு ஊசி தயாரிப்பது சாத்தியமாகிறது. படத்தில் விஞ்ஞானி ஒரு வகை வைரஸ் கிருமியின் நுண் வடிவமைப்பு மாதிரியைப் பெரிய அளவில் தயாரித்துள்ளார்.

**''என்ன வியாதி இது? எப்படி வருகிறது?''**

''இதனைத் தாளம்மை என்றும் புட்டாளம்மை என்றும் சொல்வார்கள். 'மம்ப்ஸ்'' (Mumps) என்று ஆங்கிலத்தில் வழங்கப் பெறும் இது 'வைரஸ்' எனும் நுண்ணிய கிருமிகளால் பரவுகிறது. எளிதில் தொற்றிக் கொள்ளக் கூடுமாதலால் இந்நோய் கண்டவர்களை மற்றவர்களிடமிருந்து பிரித்துத் தனியே படுக்கையில் இருக்கச் செய்ய வேண்டும். ஏழு நாட்கள் வரைதான் இதன் அதிகம். 104 டிகிரி வரை ஜுரம் இருக்கும். இது ஒரு வகை அம்மை என்று மக்கள் கருதுவதால் காய்ச்சல் கடுமையாக இருந்தாலும் மருந்து கொடுக்கப் பயந்து மருத்துவர்களிடம் செல்லவே தயங்குகிறார்கள்.''

**''அது தவறான கருத்து என்கிறீர்களா?''**

''ஆமாம். பெனிசிலின், அக்ரோமைசின் போன்ற ஆன்டிபயாடிக் மருந்துகளின் மூலம் வைரஸ் கிருமிகளை ஒழித்து விட்டால் நோய் குறைந்து விடும். இது தொடர்பான வேறு சிக்கல்கள் ஏதும் ஏற்படாமல் தடுத்து விடலாம்.''

**''பெரியவர்களுக்கும் இது வரக்கூடுமல்லவா?''**

''இதற்கு வயதுக் கணக்கே கிடையாது. ஆனால் இளம் பருவத்தினருக்கு இந்நோய் வந்தால் பூரண ஓய்வுடன் இல்லாது ஓடியாடி விளையாடினால் ஜனன உறுப்புக்கள் பாதிக்கப் படுவதுண்டு. கல்யாணமாகி 5 முதல் 10 வருடங்கள் ஆன பிறகும் சில பெண்கள் கருத்தரிக்காமல் இருந்தால், சின்ன வயதில் இந்த நோய் வந்ததுண்டா என்று தூண்டித் துருவி மருத்துவர்கள் கேட்பது வழக்கம். ஆண் பிள்ளைகளுக்குச் சிறு வயதில் இந்நோய் வந்த போது ஓடியாடி விளையாடினால் அவர்கள் ஆண்மையை இழக்க நேரிடலாம். ஆகவேதான் சின்னப் பையன்களுக்கு இந்நோய் வரும்போது விளையாட முயற்சி செய்தால் அவர்களுக்குத் தூக்க மாத்திரைகளைக் கொடுத்தாகிலும் பலவந்தமாக ஓய்வு அளிக்க வேண்டியது அவசியமாகிறது.''

**''இந்த நோய் கண்டவர்களுக்கு உணவுக் கட்டுப்பாடு ஏதாகிலும் தேவையா?''**

''அப்படியொன்றும் தேவையில்லை. தொண்டையில் வலி இருந்தாலும் உணவு உட்கொள்ளத் தடையிராது.''

**''வீட்டில் ஒருவருக்கு இந்நோய் வரும் போது மற்றவர்களுக்குப் பரவாமல் தடுக்க, ஏதாவது தடுப்பு ஊசி இருக்கிறதா?''**

''காமா க்ளாப்யூலின்' (Gamma Globulin) என்ற ஊசி மருந்தின் மூலம் தடுக்கலாம். அதையும் மீறி நோய் வந்தாலும் நோய் கடுமையாக இராது.''

டாக்டர் எம். எஸ். ராமச்சந்திரன் கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.

# பாரி நிறுவனம் இந்திய மயமாகிறது



ஈ.ஐ.டி.-பாரி (இந்தியா) லிமிடெட் இந்தியக் கம்பெனியாகப் பதிவு பெறுவது பாரி நிறுவனத்தின் 188 ஆண்டு காலப் புகழ்மிக்க வரலாற்றில் புதியதோர் சகாப்தத்தின் முக்கியத்துவம் வாய்ந்த ஆரம்பமாகும்!

திறமையும், முன்னோடியாகச் செயலாற்றும் திறனும், நாட்டுக்கும் பங்குதாரர்களுக்கும் நற்பணியாற்றும் பொறுப்புணர்ச்சியும் இணைந்து சிறப்பான அதிகாரிகள், நிர்வாகம் கொண்ட இந்நிறுவனம் மேலும் அதிக வளர்ச்சியை நாடுகின்றது.

உரங்கள், இதர விவசாயத் தேவைகள், ஸெராமிக்ஸ், ரசாயனங்கள், பெட்ரோ ரசாயனங்கள், சர்க்கரை, மிட்டாய், எலெக்ட்ரானிக் மற்றும் எஞ்சினீயரிங் பொருட்கள், ஷிப்பிங் மற்றும் போக்கு வரத்து, கடல் உணவுப் பொருட்கள், பலருக்கும் பயன்படும் பலரக நுகர் பொருட்கள், ஏற்றுமதி ஆகிய துறைகளிலெல்லாம் பாரி நிறுவனம் ஏற்கெனவே பெருமளவு ஈடுபாடு கொண்டுள்ளது. இப்போது பல வெவ்வேறு வகையான புதுத் தொழில்களையும், வியாபாரங்களையும் துவக்க அதிக வாய்ப்புகள் உள. இந்திய நிறுவனம் என்கிற அந்தஸ்து பெறுவதற்காகவே காத்திருந்த பல்வேறு தொழிற்திட்டங்கள் சீக்கிரமே செயல்படுத்தப்படும்.

பாரி நிறுவனம் இனியும் தங்கு தடையின்றி விரைந்து முன்னேறி மக்களின் சேவையில் நிலைத்து நிற்கும்.

விரிவான உருவின் அளவிலும் வளர்ச்சிக்கான பலதரப்பட்ட வாய்ப்பிலும் இன்று பாரி நிறுவனத்துக்கு இணையானது மிகச் சிலதே.

பாரி நிறுவனம் எப்போதுமே தன் பங்குதாரர்கள், ஊழியர்கள் ஆகியோரின் நலன்களுடன் பொது மக்களின் நலனிலும் அளவற்ற அக்கறை கொண்டு இயங்கி வந்துள்ளது. இனியும் இதே போல தொண்டாற்ற இங்கன்றுளில் மீண்டும் அர்ப்பணித்துக் கொள்கிறது.

மேற்சொன்ன வளர்ந்து வந்து கொண்டிருக்கும் லட்சியங்களின் சாலச் சிறந்த விளக்கமே பாரி நிறுவனம் இந்திய மயமானது.

இப்போது மாபெரும் எதிர்காலத்தின் அறைகூவலை ஏற்று முன்னேறுகின்றது பாரி நிறுவனம்.



அமைப்பில் இந்தியத் தன்மையும், செயலாக்கத்தில் அகில உலகத் திறமையும் கொண்டு திகழும் பாரி நிறுவனம் இப்போது புதிய சாதனைச் சிகரங்களை எட்டிப் பிடிக்க முனைந்துள்ளது.

Parry's

**ஈ.ஐ.டி.- பாரி லிட்.,**
**இனி பின்வருமாறு வழங்கப்படும்:**

## ஈ.ஐ.டி.-பாரி (இந்தியா) லிட்.

IOS EID 2387 TAM

"இருபத்தேழு முடியறதா ?"

கிணற்றிலிருந்து நீரை இழுத்துக்கொண்டே காதில் விழுந்ததும் விழாததுமாக நீலா பேசிய வார்த்தைகள் ரங்குவின் காதில் விழாமல் இல்லை. துளசி மாடத்தருகே நின்றவாறு காய்ந்து போன துளசிகளைப் பிய்த்துப் போட்டுக் கொண்டிருந்த ரங்கு, தம் மகளைப் பார்த்தும் பார்க்காதது போல் தம்முடைய வேலையைத் தொடர்ந்தார். துணிகளுக்குச் சோப்புப் போட்டுக் கொண்டிருந்த பார்வதி ஒரு கணம் அந்த வேலையை நிறுத்திவிட்டுத் தன் மகளைப் பார்த்தாள். நீலா ஒருவித சலனமுமின்றி நீரைப் பிளாஸ்டிக் வாளியில் ஊற்றினாள்.

"உங்கப்பா, பச்சைக் குழந்தைக்குப் பிறந்தநாள் கொண்டாடுவது போல இன்றும் சாஸ்திர ரீதியா வருஷா வருஷம் பிறந்த நாளைக் கொண்டாடி, வீட்டில் தடபுடலா பாயசம் வச்சுச் சமைச்சு...."

ஒரு விநாடி பேச்சை நிறுத்திவிட்டு ரங்கு பார்க்கிறாரா என்பதைத் தீர்மானித்த பிறகு பேச்சைத் தொடர்ந்தாள் பார்வதி.

"இதிலெல்லாம் ஒண்ணும் கொறைச்சல் இல்லே. இருபத்தேழு வயசுப் பொண்ணை வளர்த்து வச்சுண்டு அவளுக்குப் பொறந்த நாளைக் கொண்டாடிண்டு உட்கார்ந்திருக்கார் !"

ரங்கு தொண்டையைக் கனைத்தார். யாராவது இருவர் பேசும் போது ரங்கு தம் தொண்டையைக் கனைத்தால் அவர் ஏதோ சொல்ல விரும்புகிறார் என்று அர்த்தம். பார்வதி சிரித்தவாறே பேசினாள் : "என்ன சொல்லணும்னு நினைக்கிறேள்? சொல்லுங்களேன். அதையுந்தான் கேட்டு வைப்போம்."

"ஒண்ணுமில்லே. இருபத்தேழு வயசுக்கு ஆயுஷ்ஹோமம் செய்யறதைப் பத்திப் பரிகாசமா பேசறியே? எங்கப்பா மட்டும் உசிரோட இருந்தால் இப்பவும் எனக்கு வருஷா



வருஷம் ஆயுஷ் ஹோமம் செய்துண்டிருப்பார் !''

'' செய்வார்.... செய்வார்..... இதைத் தான் தொண்டையைப் பெரிசா கனைச்சிண்டு பிடிகையோடு சொல்ல வந்தேளாக்கும்? இந்த வயசிலே கல்யாணமாகிப் பத்து வருஷமாச்சு, பதினொரு வருஷமாச்சுன்னு கொழந்தைகள் சொல்லிண்டு நமஸ்காரம் பண்ணற காலம். நீங்க என்னன்னு பொறந்த நாளைக் கொண்டாடிண்டு ஒக்காந்திருங்கோ...''

இந்தப் பேச்சு நீலாவுக்குக் கேளாமலில்லை. அவளுக்கு, இது போன்ற வாக்குவாதங்கள் மிக மிகப் பழகிப் புளித்துப் போய்விட்டன.

''எதுக்கம்மா அநாவசியமா அப்பாவோட போய் நல்ல நாளும் அதுவுமா ஒரு தர்க்கம்? பேசாமல் புடவையை அலசு. மானம் மூடிண்டு இடியோட வருது. மழை கொட்டினாலும் கொட்டும்.''

பார்வதியிடமிருந்து பேச்சு சூடாக வந்தது.

'' மழையும் வராது. புயலும் வராது. இடியும் மின்னலுமா இருந்துட்டு புஸ்ஸுன்னு போயிடும். நம்மப்பா உனக்குக் கல்யாணம் நிச்சயம் பண்றாப் போலத்தான். எல்லாம் வந்து முடியற நேரத்திலே உங்கப்பா, பையன் மீசை வைச்சிண்டிருக்கான்னு ஒரு சாக்குச் சொல்லி மொழுக்குன்னு இருந்துடுவார்...''

''பேச்சு எப்படிப் போனாலும் என்னைப் பத்தித்தான் முடியறது. பேசு...'' என்ற

## இன்றையக் கதை

# வரம்பு

### பிச்சம்மா

வாறே நீலா கிணற்றுக்குள் வாளியை விட்டாள்.

'' குழந்தையைப் பக்கத்திலே வச்சிண்டு இப்படியெல்லாம் பேசப்படாது நீ... தெரியறதோ? அவள் மனசிலே நான் ஏதோ குறுக்கே நிக்கறாப் போலத் தோணும். இதோ பார், கல்யாணம்ங்கறது இலேசுப்பட்ட காரியம்இல்லே. நாமென்ன கையிலே பணமில்லேன்னு கல்யாணத்தைத் தள்ளிப் போட்டுண்டு வரோம்? நம்ம நீலாவுக்கு அமையப் போற மாப்பிள்ளை எப்படியெல்லாம் இருக்கணும்னு நான் மனசிலே கற்பனை பண்ணி வச்சிருக்கேன், தெரியுமா? காலமெல்லாம் அவள் கஷ்டப்படாமல் வாழணும்ங்கிறதுக்குத்தான் இப்படி செலக்ஷன் பண்ணிண்டிருக்கேன்.''

''பண்ணுங்கோ... அப்புறம் உங்க பொண்ணுக்கு செலக்ஷனுக்குண்டான வயசு தாண்டிப் போயிடும்.''

'' நல்ல நாளும் அதுவுமா என் வாயைப் பெருக்காதே. எல்லாம் நடக்கிறபோது தானே நடக்கும்? எனக்கு எல்லாம் ஒரு வரம்புக்குள் அடங்கி நடக்கணும். அது மீறப்படாது. அவ்வளவுதான்.''

'' அம்மா, இந்தப் பேச்சை இதோடு நிறுத்தப் போறியா? இல்லே நான் அப்படியே உள்ளே போகட்டுமா?''

''உம்... எப்போதான் பகவான் கண் திறக்கப் போறாரோ?'' என்று ஒரு வழியாக வாயை மூட முயற்சி செய்தாள் பார்வதி.

'' உன்னோட பேசிண்டே நல்ல துணியையும் ரெண்டு பிச்சிட்டேன்.... பாபம்....'' என்றவாறே உள்ளே போனார் ரங்கு.

ரங்குவைப் பொறுத்தவரை அவருக்குத் தம் மகள் நீலாவுக்குக் கல்யாணம் செய்து வைக்கக் கூடாதென்ற நினைப்போ, அல்லது கொஞ்ச காலம் தள்ளிப் போடலாமே என்கிற நிர்ப்பந்தமோ இல்லை. இன்று நிச்சயமானால் நாளைக்கே கல்யாணத்தை வைத்துக் கொள்ளக்கூடிய அளவுக்கு 'ரெடி கேஷ்' வைத்திருக்கிறார் ரங்கு. ஆனால் — பார்வதி சொல்வதைப் போல் — அவருக்கு ஒரு 'வீக்னஸ்'.

ஜாதகத்தைத் தலைகீழாக அலசி ஆராய்வார். எல்லாம் பொருந்தி வருகிறபோது மாப்பிள்ளைக்கு மீசை இருக்கும். அல்லது அக்னி அவன் வாயில் இருந்து தொலைக்கும். அவருக்குப் பிடித்த மாதிரி யாராவது பையன் கிடைத்துவிட்டால், கடைசியில் ஏதாவது ஒரு சிறு தோஷம் இருந்து தொலைத்துவிடும். நீலாவுக்கு ஜாதகப் பொருத்தமெல்லாம் பார்த்துப் பார்த்து இப்போது பார்வதிக்கும் நீலாவுக்குமே ஜாதகம்கூடப் பார்த்துப் பலன் கூற வந்து விட்டது.

அன்று தனக்கு இருபத்தேழு வயது முடிந்ததும் கிணற்றடியில் நின்று யதார்த்தமாகத் தான் சொன்னாள் நீலா. அது ஒரு பெரிய விவாதத்தில் தொடங்கி வழக்கம்போல் நீலாவின் தலையீட்டால் அடங்கியும் போயிற்று.

விடியற்காலை நாலரை மணிக்குப் பால் வாங்கத் தம் அறையிலிருந்து கூடத்துக்கு வந்து விளக்கைப் போட்ட ரங்கு துணுக்குற்றார்.

பார்வதியின் பக்கத்தில் படுக்கை சுற்றி வைக்கப்பட்டிருந்தது. வாசல் கதவு தாழ்ப்பாள் பத்திரமாகவே போட்டிருந்தது.

தூங்கிக் கொண்டிருந்த பார்வதியை உலுக்கி எழுப்பினார் ரங்கு.

''எங்கேடி நீலா?''

''நீலாவா? என்ன கேட்கிறேள்?''

''என்னடி இது? உன் பக்கத்திலேதானே படுத்திண்டிருந்தாள்?''

''ஆமாம். படுத்திண்டிருந்தாள்.''

''என்னடி இது? நான் பதறிண்டு கேக்கறேன். நீ சாவதானமாகக் கொட்டாவி விட்டுண்டே பேசறே?''

''என்னையும் பதறச் சொல்றேளா?''



**எலி செத்தது : மனிதன் வாழ்கிறான் !**

புரூக்லின் கல்லூரியைச் சேர்ந்த இரண்டு ஆராய்ச்சியாளர்கள் நியூயார்க் பாதாள ரயிலில் செல்லும் பயணிகள் அதிர்வுகளால் எவ்வாறு பாதிக்கப்படுகிறார்கள் என்பதைச் சோதித்துப் பார்க்க முடிவு செய்தனர். அவர்கள் தங்களுடைய பரிசோதனைக்கு 25 எலிகளை எடுத்துக் கொண்டனர். அவைகளைக் கூடுகளில் வைத்து ரயிலில் ஏற்படுவது போன்ற ஆட்ட அதிர்ச்சியை உண்டு பண்ணினர். காலை மாலை ஒரு மணி நேரம், வாரத்தில் ஐந்து நாட்கள் சோதனை நடந்தது. அதோடு பாதாள ரயிலில் இயற்கையாக ஏற்படும் ஒலியை அப்படியே பதிவு செய்து வந்து எலிகளுக்குப் போட்டுக் காட்டினர். 16 வாரங்களுக்குள் 4 எலிகள் இறந்து விட்டன. — நியூடைம்ஸ்

---

''இதோ பார். எனக்குக் கோபம் வந்துட்டா என்ன நடக்கும்னு உனக்குத் தெரியும். சீக்கிரம் சொல்லு. எங்கே அவள்?''

''போய்ப் பாலை வாங்கிண்டு வாங்கோ. நான் சொல்றேன்.''

''முடியாது. மொதல்லே சொல்லு.''

''இத்தனை நேரம் அவள் ரெண்டு மூணு ஸ்டேஷன் தாண்டிப் போயிருப்பாள்.''

''ரெண்டு மூணு ஸ்டேஷனா?''

''ஆமாம்.''

''யாரோட?''

''மாடியிலே குடியிருக்காரே, காலேஜ் லெக்சரர், அவரோட....''

''என்ன? பார்த்தா பரம சாதுவா இருந்தாரே அவரா?''

''அவரே தான். பரம சாதுவா இத்தனை வருஷமா அவளுக்குத்தான் காத்திண்டிருந்தார் போல் இருக்கு.''

''வாயை மூடு. சின்ன வயசானாலும் நாலு அறை வைச்சிருப்பேன். வயசாச்சு. உனக்குத்தான் சொல்றேன். நீயும் உடந்தையா இதுக்கு?''

''உடந்தைன்னு சொல்ல முடியாது. நேத்து துணி உலர்த்தப் போகறச்சே அவர் தான் பேச்சை ஆரம்பிச்சார். நேத்து நாம கிணத்தடியிலே பேசறபோது அவர் மாடி ரூம் ஜன்னலண்டை நின்னுண்டு கேட்டிண்டிருந்திருக்கார். அவர், தம் ஆசையை மனசை விட்டு நம்மண்டை சொல்ல முடியாமல் இத்தனை நாளும் இருந்திருக்கார். நான்தான்... அவர் இன்னிக்கு விடியற்காலம் ஊருக்குப் போறதாகச் சொன்னார். நான்தான்... துணிச்சலா இந்த யோசனையைச் சொன்னேன். ஊருக்குப் போய் அம்மாவிடம் பர்மிஷன் வாங்கறதை விட இவளையும் அழைச்சண்டு போய், நமஸ்காரமே பண்ணிடுங்கோன்னு சொன்னேன். இதுக்கு நீலாவை நான் சம்மதிக்க வைச்ச பாடு இருக்கு பாருங்கோ... போறும் போறும்னு ஆயிடுத்து. நீங்களா பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கப் போறதில்லே. உங்க வரம்புக்கெல்லாம் உட்பட்ட மாப்பிள்ளை இந்த ஜென்மாலே வரப் போறதில்லே. பொண் வயசு பதினேழு இல்லே... இருபத்தேழு தெரியுமோ?''

தூக்கத்திலிருந்து எழுந்து உளறுகிற வார்த்தையாக இல்லை, பார்வதியின் பேச்சு. ரங்குவுக்கு ஆத்திரம். இந்த உலகத்துக்கும் ஊருக்கும் தன்னை ஒரு பாவியாக அம்மாவும் பொண்ணுமாகச் சேர்ந்து ஆக்கிவைத்து விட்டார்களே என்று பெரிதும் பதறினார் அவர்.

''என்னை மன்னிச்சுடுங்கோ.''

''யாரைடீ மன்னிக்கிறது? மன்னிக்கிற குத்தமாடீ பண்ணியிருக்கே நீ? ஓடிப்போன நீலாவைக்கூட மன்னிக்கலாம். ஆனா அதுக்கு ஒத்தாசையா நின்ன உன்னை மன்னிக்கிறதா?''

''என் மனசைப் புரிஞ்சுண்டு பேசுங்கோ. ஆத்துக்காரரோட இருக்க வேண்டிய அந்தப் பொண்ணை ஆத்திலே பக்கத்திலே படுக்க வச்சிண்டு நான் ராத்தூக்கமில்லாமல்... பகல் தூக்கமில்லாமல்....''

''இப்போ பகல்லேயும் சேர்த்து தூங்கு. ஏன்னா வெளியே தலைகாட்ட முடியாது அவமானம்!''

''போய்ப் பாலை வாங்கிண்டு வாங்கோ. திரும்ப நம்ம மாடிக்குத்தான் வரப்போறா நீலா....''

வாசலில் ஏதோ சத்தம் கேட்டுப் பேச்சை நிறுத்தினாள் பார்வதி. வேகமாக வந்து கதவைத் திறந்தார் ரங்கு.

மாடியின் இரண்டாம் படிக்கட்டில் கன்னத்தில் கையும், கண்ணில் நீருமாக உட்கார்ந்திருந்தாள் நீலா.

''அப்பா...! நீங்கல்லாம் பேசினபடி நான் எங்கேயும் ஓடிப் போயிடல்லேப்பா. மாடியிலே இருக்கிற அவர் மட்டும்தான் இப்போ ஊருக்குப் போயிருக்கார், தம் அம்மாவிடம் உத்தரவு வாங்கறதுக்கு. நான் என்னமோ ஒரு ஆசையிலேதான் கிளம்பி மாடிக்குப் போனேன். ஒரு நிமிஷம்....அவரோட கிளம்பிப் போறதுக்கு முந்தி ஒரு நிமிஷம், நானும் கொஞ்சம் யோசனை செய்ஞ்சு பார்த்தேன். இத்தனை வயசு காத்திண்டிருந்துட்டு, இப்படி ஒரு பெயரோடயா என் கல்யாணம் நடக்கணும்னு? எதுக்கெடுத்தாலும் வரம்பு வரம்புன்னு புலம்பற உங்களோட மனசு வரம்பில்லாத அவமானப்படறதுக்கா இத்தனை வயசு கன்னியாகவே இருந்தோம்னு நினைச்சுப் பார்த்தேன். அவர்கிட்டே என் ஆசையைச் சொன்னதும் அவரே சொன்னார்...

'' 'என் தாயார் இதுக்கு மறுப்புச் சொல்லப் போறதில்லே. ஆனா, எதுக்குப் போறேன் தெரியுமா? நான் என் வரம்பை மீறப்படாதுன்னுதான். திரும்பி வந்து நானே உங்கப்பாவிடம் சண்டை போட்டுப் பெண் கேட்கிறேன். அதுவரைக் காத்திண்டிரு'ன்னு சொல்லிட்டுப் போயிருக்கார்....''

''........''

''நான் இப்போ எதுக்கு மாடிப் படியிலே உட்கார்ந்திருக்கேன் தெரியுமா? அவர் வர்ற வரைக்கும் காத்திண்டிருக்க இல்லே... அம்மா வந்து கதவைத் திறக்கட்டும்னுதான். என்னைப் பொறுத்த வரைக்கும் இது ஒரு தவம். நான் வரம்பு மீறல்லே... உங்க பொண்ணில்லையா நான்?''

ரங்குவுக்குப் புரியாமலில்லை. அவர் பாஷையில் சொல்லப் போனால்—

நீலாவுக்கு இப்போதுதான் வேளை வந்திருக்கிறது. அவ்வளவுதான்.

# மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

# ஹைடன்ஸா

களிம்பு உபயோகித்து நிவாரணம் அடையுங்கள்; —ரண சிகிச்சையையும் தடுங்கள்

காஞ்சிப் பெரியவாள் ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் வளர்ந்த ஊராகிய ஈச்சங்குடியில் (இது திருவையாற்றுக்கு அருகில் இருக்கிறது) உள்ள தர்ம சாஸ்தா (ஸ்ரீ ஐயனார்) கோவில் லயமாக இருந்ததால், ஸ்ரீ பெரியவாளின் ஆணைப்படி மற்றொரு திருப்பணி மேற்கொள்ளப்பட்டு 1972ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

மீண்டும் ஸ்ரீ பெரியவாளின் ஆணைப்படி மற்றொரு திருப்பணி அதாவது ராஜ கோபுரம் அமைக்கும் திருப்பணி நடைபெற்று வருகிறது. 5-9-76 ஞாயிற்றுக் கிழமை கும்பாபிஷேகம் செய்ய நிச்சயித்துள்ளது. ஆஸ்திக அன்பர்கள் இவ்வாலயத் திருப்பணி பூர்த்திக்கும், கும்பாபிஷேகத்துக்கும் தாராளமாகப் பொருளுதவி செய்து ஸ்ரீ ஐயனாரின் அனுக்கிரகத்தைப் பெற வேண்டுகிறோம். பொருள் அனுப்பவேண்டிய முகவரி: **திரு ஆர். டி. ராஜன்**, காரியதரிசி, ஈச்சங்குடி ஸ்ரீ ஐயனார் கோவில் ராஜகோபுரத் திருப்பணிக் குழு, 37, மவுண்ட் ரோடு, சென்னை 600006.



# சுபோதயா

## சிட் பண்ட்ஸ் பிரைவேட் லிட்.

பதிவு அலுவலகம்: சுபோதயா பில்டிங்ஸ்

163A/1, ராயப்பேட்டை ஹைரோடு, மைலாப்பூர், சென்னை-600004, போன்: 76708

1961 வருட சிட் பண்ட் விதிப்படி கீழ்க்கண்ட சிட்டுகள் நடத்தப்படுகின்றன

**நீண்டகால சிட்டு**

| | | | |
|---|---|---|---|
| LTB | ரூ. 250/- | 40 மாதங்கள் | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | 40 மாதங்கள் | ரூ. 5,000/- |
| LTD | ரூ. 50/- | 40 மாதங்கள் | ரூ. 2,000/- |

இலவச துணை விதிகளுக்கு விண்ணப்பிக்கவும்

## சுபோதயா பைனான்ஸ் கார்ப்பரேஷன்

163A/1, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை - 600004

கவர்ச்சியான வட்டி விகிதங்களில் டெபாசிட் ஏற்றுக்கொள்ளப்படும்

| 6 மாதங்கள் | 1 வருஷம் | 2 வருஷம் |
|---|---|---|
| 11% | 13½% | 14% |

V. சிவராமன் — V. தர்மராஜ், டைரக்டர்கள்



## வட்ட மேஜை

# மந்திரத்துக்கு மசியும்!

இ. எஸ். ஐ. திட்டம் பற்றிய விவாதத்தைப் படித்தேன். திருப்பூரிலிருந்து ஓர் அன்பர், "பத்து நாட்களுக்குப் பணம் வர வேண்டியிருந்தால், 'உனக்கு மூன்று நாட்களுக்குத்தான் பணம் கிடைக்கும்' என்று சொல்லி மீதியைத் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொள்கிறார்கள்" என்று எழுதியிருப்பது வருந்தத் தக்கதாய் உள்ளது. எத்தனையோ துறைகளில் ஊழலும், லஞ்ச லாவண்யங்களும் தலைவிரித்தாடும் இந்நாளில் இ. எஸ். ஐ. தன்னலம் கருதாச் சேவையைத் தொழிலாளர்களுக்குச் செய்து வருகிறது. பேறுகால உதவி, நிரந்தர ஊன உதவி ஆகிய சமயங்களில் ஆயிரக் கணக்கான ரூபாய்கள் எவ்விதத் தொல்லையுமின்றி எளிதில் தரப்படுகிறது.

எந்த ஒரு நல்ல துறையிலும் சில புல்லுருவிகள் இருக்கத்தான் செய்கிறார்கள். அவ்வாறு எந்த இடத்திலாவது முறைகேடுகள் ஏதேனும் நிகழ்ந்தால், உடனே மேலதிகாரிகளிடம் புகார் செய்து பரிகாரம் பெறலாம். அதை விடுத்து ஒட்டு மொத்தமாக கார்ப்பொரேஷன் முழுவதையுமே சாடியிருப்பது முறையன்று.

ஒண்டிப்புத்தூர்
14–6–76 வி. மூர்த்தி

"இதோ பதில்" பகுதியில் தமிலன் அவர்கள் ஒரு பைசாவுக்குச் சாக்குக்கட்டி கிடைப்பதாக எழுதி உள்ளார்.

நான் என் வகுப்புப் பையனிடம் ஐந்து பைசா கொடுத்துச் சாக்குக் கட்டி வாங்கி வரச் சொன்னேன். கடைக்காரர் இரண்டு தான் அனுப்பினார். நான் கல்கியில் பைசாவுக்கு ஒன்று என்று எழுதி யிருப்பதைச் சொல்லி அனுப்பினேன். 'போனால் போகிறது' என மேலும் ஒன்று கொடுத்தனுப்பினார்.

மன்னார்குடி
20-6-76 து. ப. நடனம்

ருட்மார்னிங் டாக்டர் பகுதியில் 'மந்திரத்துக்கு மசியுமா மஞ்சள் காமாலை?' கட்டுரையைப் படித்தேன்.

ஆறு வருடங்களுக்கு முன் நான் பாலக்காட்டில் இருக்கும்போது எனக்குத் தெரிந்த ஆசிரியர் குடும்பத்தில் திருமணம் செய்து கொடுத்த அவர்களது பெண்ணுக்கு மஞ்சள் காமாலை நோய் ஏற்பட்டது. அவர்களுக்கு ஒரே பயம். காரணம் ஒரே மகள். நாட்டு மருத்துவம் பார்க்கப் பக்கத்து வீட்டார் சிபாரிசு செய்தார்கள். அதில் அந்த ஆசிரியர் குடும்பத்துக்கு நம்பிக்கை இல்லை. (எனக்கும் தான்.) எனினும் மகளுக்கு எப்படியாவது நோய் குணமாக வேண்டும் என்ற எண்ணத்தில் சம்மதித்தனர்.

வைத்தியர் வந்து மூலிகை வேர் வைத்துக் கட்டிய மாலையை ராகு காலத்தில் ஜெபித்துக் கழுத்தில் இறுகக் கட்டினார். பின் கொஞ்சம் மருந்தும் கொடுத்துவிட்டு, பத்தியமும் சொல்லி வேறு நாள் வருவதாகவும் கூறி விட்டுப் போய்விட்டார்.

நாளுக்கு நாள் கழுத்தில் கட்டிய மூலிகை வேர் மாலை விரிவடைந்து கொண்டே வந்து பதினைந்து நாட்களில் இடுப்பைத் தாண்டி வந்து கீழே விழுந்து விட்டது. அப்புறம் நல்ல சுகம். எல்லோருக்கும் மிக்க மகிழ்ச்சி.

விஞ்ஞானம் வளர்ந்த இந்த நேரத்திலும் மந்திரத்தாலும் மஞ்சள் காமாலை நோயைக் குணப்படுத்துகிறார்களே என்று எனக்கு ஒரே ஆச்சரியம்.

நாகர்கோவில்-2
11–6–76 ம. தாமஸ்

பி. வி. ஆர். எழுதிய "மண் தெய்வம்" சிறுகதை மிக அருமை. இப்படிப்பட்ட கதைகள் 'இன்றைய கதை' வரிசையில் இடம் பெறக் கூடாதவாறு டாக்டர்கள் பார்த்துக் கொள்வார்களா?

தோப்புவிளை
10–6–76 எஸ். ஏ. பிச்சை

இந்த வார தலையங்கத்தில் சில வரிகள் பாங்கில் பணிபுரியும் எங்களை மிகவும் புண்படுத்துவதாக அமைந்துள்ளது. நெருக்கடி நிலைப்பிரகடனத்துக்கு முன்பும் பாங்கு ஊழியர்கள் தங்களது தினசரி அலுவல்களை அன்றன்றைக்கு திறம்படச் செய்து வந்தார்கள். பொது மக்களுக்குச் சேவை, நாட்டின் நலன் இவ்விரண்டிற்கும் என்றும் பழுதுபட அவர்கள் நடந்தது கிடையாது.

மதுரை–6
17–6–76 தங்கபாண்டியன்




நாஜிகளின் வேத நூலாக இருந்த 'மெய்ன் காம்ப்'பின் ஒவ்வோர் எழுத்தின் காரணமாகவும் 125 பேர் உயிர் நீத்தார்கள். ஒவ்வொரு பக்கத்தின் காரணமாகவும் 4700 பேர்கள் உயிர் துறந்துள்ளார்கள். ஒவ்வோர் அத்தியாயத்தின் காரணமாகவும் 1,200,000 பேர்கள் உயிர் நீத்துள்ளார்கள்.

கோ. தீபா

## நேப்பிள்ஸ் கடையில் நகையைக் காணோம்!

நேப்பிள்ஸில் ஒரு பெண் 'பிராம்' வண்டியைத் தள்ளிக்கொண்டு நகைக் கடைக்குள் நுழைந்தாள். குழந்தை சிணுங்கி அழுது கொண்டிருந்தது. ஒரு விலை உயர்ந்த நகையைத் தேர்ந்தெடுத்த அந்தப் பெண், அதை வெளியே சூரிய வெளிச்சத்தில் சோதித்துப் பார்க்க எடுத்துப் போனாள். 'எப்படியும் அழுது கொண்டிருக்கும் குழந்தையை மறுபடியும் வந்து எடுத்துக் கொண்டுதானே போக வேண்டும்' என்று நினைத்த கடைக்காரர் ஏமாந்தார். அந்தப் பெண் திரும்பி வரவில்லை. அவள் போன கொஞ்ச நேரத்தில் குழந்தையும் அழுவதை நிறுத்திவிட்டது. 'பிராமி'னுள் பார்த்தால் ஒரு டேப் ரிகார்டர்!

ராமு - வீக் எண்ட்





## எட்டரை மணிக்கே எங்கள் பள்ளி!

காலை எட்டரை மணிக்கே பள்ளி
வேலை துவங்கிய நாள்முத லாகப்
பாவம் எங்கள் டீச்சர் முகத்தில்
பவுடரும் காணோம்! பாசமும் காணோம்!
கோபம் மட்டும் குடியிருக் கிறது!
வேலைக்குப் போகும் பெண்கள் மட்டுமே
காலையில் எழுந்து கஷ்டப் படுகிறார்
என்பது இல்லை! எங்களைப் பெற்ற
அம்மா பாவம்! அடுப்பங் கரையில்
நாலரை மணிக்கே நடனமும் ஆடித்
தூங்கி விழித்துச் சுறுசுறுப் போடு
எருமை முகத்தில் விழித்து பால்வாங்கி
தெருக்குழாய்ச் சண்டையும் செய்து முடித்துக்
காப்பியும் போட்டுக் காய்கறி நறுக்கிச்
சமையல் சாதம் . இட்டிலி சாம்பார்
யாவும் படைத்து ஏழரை மணிக்குள்
எங்களைத் தட்டி எழுப்பி விரட்டித்
தனித்தனி யாகப் பார்சலும் கட்டித்
தந்து தங்கையின் தலைமுடி வாரி
பள்ளிக்கு அனுப்புதல் பரிதாப மாகும்!
எட்டரை மணிக்குள் எங்கள் கோஷ்டி
பட்டணப் பிரவேசப் பயணம் செய்ததும்
பத்தரை மணிக்குப் படைதான் எடுக்கும்
ஆபீஸ் கோஷ்டி அம்மாவை விரட்டும்!
அப்பா அண்ணன் அண்ணி அக்காள்
உப்புமா பொங்கல் ஒவ்வொரு பார்சல்
எடுத்துக் கொடுத்து அனுப்பிய பின்னர்
படுத்துத் தூங்கலாம் என்று எண்ணுதற்குள்
பாட்டில் பாலுக்குக் ''டியூ''வும் மாவு
ஆட்டும் நேரமும் அதற்குள் வந்திடும்.
பின்னர் இரண்டரை மூன்று மணிக்குள்
சின்னஞ் சிறிசுகள் பள்ளி முடிந்து
வந்த குழந்தைகள் பசியினை நீக்கி
வாசல் பெருக்கிக் கோலம் போடுதற்குள்
தந்தனத் தான சதுராடி ஆபீஸ்
சென்ற கோஷ்டிகள் திரும்பிடும்! பிறகோ
அத்தனை பேரையும் அன்புடன் கவனித்துச்
சித்த நாழி தலைசாய்க்க எண்ணினால்
சாமக் கோழி தான்கூவி விடியும்!
ஆறுதல் ஒன்று அருமைத் தம்பி
மட்டம் போட்டு மாட்டினி சென்று
முன்பெலாம் அடித்தது போலன்றி இப்போ
பள்ளி விட்டதும் படம்பார்க்க வசதி
எல்லா நாளிலும் இருப்பது உண்மையே!

நெல்லை ஆ. கணபதி



மௌனத்தின் ஒளி மங்கிய இருளில் அவன் காரில் ஏறக் கதவைத் திறந்தபொழுது மனத்தில் ஒரு குளுமை. டிரைவிங் சீட்டில் அருணா ஏறிக் கொண்டாள். மல்லிகையின் மணம் குபீரென்று பரவியது.

அருணாவுடன் சங்கருக்கு அதிகப் பழக்கம் இல்லை. அவன் வேலை பார்க்கும் பேங்குக்கு அவள் அடிக்கடி வருவாள். அவன் தனியாகக் கடற்கரையில் உட்கார்ந்திருந்ததைக் கண்ட அவள், அவனை அடையாளம் கண்டுகொண்ட கவட்டில் ஒரு புன்முறுவல் பூத்து, 'ஹல்லோ' போட்டுக்கொண்டு பேச வந்தாள். அந்தப் பேச்சு வட்ட வட்டமாகச் சுழன்று வளர்ந்து அவனை அவன் வீட்டில் 'ட்ராப்' பண்ணும் சகஜ நிலை வரை வளர்ந்து விட்டது.

வீட்டு வாசலில் அவன் இறங்கியதும் அவனை அழைத்தாள். 'நேரமாகிவிட்டது' என்று கூறிக் கையை அசைத்துவிட்டுப் போய் விட்டாள் அருணா. தண்ணீர் பட்டதும் மணத்தை எழுப்பிக் குழையும் சோப்பின் வாசனையாக அவன் மனத்தில் அவள் நுரைத்துப் பொங்கினாள்.

வீட்டினுள் நுழைந்ததும் கல்யாணி வந்திருந்ததைப் பார்த்தான். அவள் அவனுக்கு எட்டிய உறவு.

''ஹல்லோ, கல்யாணி! நீ எப்பொழுது வந்தாய்?'' என்று கேட்டபடியே உடை மாற்றி வந்தான்.

''அப்பாவும், அம்மாவும் ஒரு கல்யாணத்துக்காகப் போயிருக்கிறார்கள். காலையில்தான் வருவார்கள். வீட்டில் தனியாக இருக்க வேண்டாம் என்று அலுவலகத்திலிருந்து நேரே இங்கேயே வந்து விட்டேன்'' என்றாள் கல்யாணி.

அம்மா போட்ட சாப்பாட்டைத் தன் நினைவின்றிப் பிசைந்து கொண்டிருந்தான் சங்கர். பணக்காரியும் பேரழகியுமான அருணாவைப் போன்ற பெண்ணுடன் பழகித் தனியாகக் காரில் வந்தது இதுவே முதல் தடவை. அதனால் நெஞ்சக் கதவில் தட்டப்படும் அனுராகத் தட்டல்களை அவன் தனக்குத் தானே ரசித்துக் கொண்டிருந்தான்.

''அருணா!''

''வாட் ஏ ஸ்வீட் கேர்ல்!''

அவன் தன் அறைக்கு வந்தபொழுது கல்யாணி அவனைத் தொடர்ந்து வந்தாள்.

''அருணாவின் காரிலா வந்தீர்கள்?'' என்று மென்மை வாய்ந்த குரலில் வினவினாள்.

''ஆமாம்; உனக்கு அருணாவைத் தெரியுமா?''

மனசுக்குப் பிடித்த பாட்டைக் கேட்டு மயங்குவது போல யாரிடமாவது அவளைப் பற்றிப் பேச வேண்டும் என்ற எண்ணத்துக்குக் கல்யாணி கிடைத்தாள்.

''ஓ... என் கல்லூரித் தோழி. ஒரு வருஷம் சீனியர். பணக்காரி; கர்வமும், அகம்பாவமும் நிறைந்தவள் என்று கல்லூரியில் யாரும் நெருங்கிப் பழகவே மாட்டோம்'' என்ற கல்யாணி, ''சங்கர், இந்தப் புத்தகத்தை எடுத்துக் கொள்ளட்டுமா? தூக்கம் வரும் வரை படிக்கும் வழக்கம் எனக்கு உண்டு'' என்றவாறே வெளியேறினாள். அவனுடைய ஆவல் சப்பிட்டுவிட்டது.

வெளி ஹாலில் கல்யாணியும், அவன் அம்மாவும் பேசும் சத்தம் நீண்ட நேரம் கேட்டுக் கொண்டிருந்தது. கை தட்டலுடன் ஆரவாரமாகப் பேசும் அருணாவின் குரலும், சிரிப்புமே அவன் காதுகளில் நிறைந்திருந்தன. உறக்கம் வராமல் இந்த நினைவில் புரண்டு கொண்டிருந்தவன் எப்பொழுது கண்ணயர்ந்தானோ, அவனுக்கே தெரியாது.



# கார் காலத்து வானவில்!

லக்ஷ்மி ராஜரத்தினம்

ஒரு நாள். மூன்று மணியளவில் திடீரென்று. ''சங்கர்! ஹெரண்ட்லூரம் எக்ஸிபிஷ

னுக்குப் போக வேண்டும்'' என்று கல்யாணி கூறிக் கொண்டு அவனுடைய அலுவலகத்துக்கு வந்ததும், சங்கர் சற்றுத் தயங்கினான். அருணாவுடன் வேறு ஒரு புரோக்ராம் இருந்ததுதான் காரணம்.

'' வெரி சாரி கல்யாணி! அருணாவுடன் ஓர் எங்கேஜ்மெண்ட். இன்று என்னால் வர முடியாது. இன்னொரு நாள் போகலாமா ?'' என்று அவன் கேட்டதும் அவள் எழுந்து கொண்டாள்.

கல்யாணி கிளம்பிய சற்று நேரத்துக்கெல்லாம் அருணா வந்துவிட்டாள். அவனுக்காகக் காரில் காத்துக் கொண்டிருப்பதில் ஒரு பெருமை. அவனுடைய கம்பீரமான அழகிய தோற்றத்தில் ஒரு மயக்கம். அந்தக் கம்பீரமான எடுப்புத் தோற்றத்துக்கு இணையாகத் தன்னை அலங்கரித்துக் கொள்வதில் — தன் தோழிகளுக்கு அவனை அறிமுகப்படுத்தி வைப்பதில் அவளுக்குத் தனி ஆசை உண்டு.

அவன் எதிர்பாராதபொழுது அவனைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றுவிட்டாள் அருணா. அந்த வீட்டைப் பார்த்து அவன் பிரமித்துத்தான் போனான். அவள் வசதி படைத்த ஒருவரின் செல்வ மகள் என்பது தெரியும். ஆனாலும் இவ்வளவு பணக்காரியா? அவன் வரவை அவள் தந்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்பது பேச்சின் ஓட்டத்திலேயே புரிந்தது.

''வெரி க்ளாட்டு மீட் யூ'' என்று அவன் கரத்தைப் பிடித்துக் குலுக்கியபடி அவள் தந்தை: அருணாவின் அக்காவோ என்று ஐயுறும் வண்ணம் அலங்கரித்துக் கொண்டு வந்த அவள் அம்மா: அந்தப் பெரிய ஹால், அதில் வண்ணமாக ஒளிரும் கண்ணாடி சர விளக்குகள், மூலைக்கு மூலை குடிகொண்ட மௌனம் எல்லாம் அவனைப் பிரமிப்பில் ஆழ்த்தின.

மௌனம் நிறைந்த நி[illegible]த்தை



இனிமையாக்கும் சன்ன இசையாக அவன் அந்த நினைவைப் போற்றினான். அந்த நினைவின் கவட்டில் கல்யாணி நிற்கும் இடமே அவனுக்குத் தெரியவில்லை.

'' இந்தியாவைப் பார்க்க வந்திருக்கும் நான்கு அமெரிக்க நண்பர்கள் எங்கள் வீட்டின் விருந்தினர்களாகத் தங்கியிருக்கிறார்கள். அவர்களுடன் நாம் ஒரு வாரம் மகாபலிபுரத்தில் தங்க வேண்டும். அந்த நால்வரில் ஒருவர் கலிபோர்னியா சர்வகலாசாலை மாணவர். சரித்திர ஆராய்ச்சியாளர். அவருடைய சரித்திர ஆராய்ச்சிக்கு நம் மாமல்லபுரமும் ஒரு குறிக்கோளாக அமைந்திருக்கிறது.''

'' அது சரி; நாம் என்றால் ?''

'' நீங்களும் எங்களுடன் வரப் போகிறீர்கள்.''

அவனுடைய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவளுடைய உற்சாகம் அவனைத் தொத்திக் கொண்டது. அதனால் எப்படி, எங்கே போக வேண்டும்? என்ன மெனு போட வேண்டும் ? அவர்களுக்கு நம் நாட்டின் நினைவாக என்ன பரிசு தரலாம் என்றெல்லாம் இருவரும் பேசித் தீர்த்தார்கள். புதிதாகச் சில பேண்ட், கோட் என்று தைக்கக் கொடுத்தான். செலவைப் பார்த்தால் முடியுமா ? அருணாவுடன் தங்கும் பொழுது 'ட்ரிம்'மாகத் தோன்ற வேண்டாமா ?

இரவின் உறக்கத்தில்கூட 'அருணாவுடன் பேசிய பேச்சுக்கள் சுகத்தையும், உல்லாசத்தையும் கொடுத்தன. 'இதழ்களில் ஒரு புன்சிரிப்பைத் தவழவிட்டன.

திடீரென்று அடுத்த சந்திப்பில், ''என் அப்பா, அம்மாவிடம் சொல்லிவிட்டேன். அவர்கள் என் விருப்பத்துக்கு ஓ.கே. போட்டு விட்டார்கள். இனி மேல் டும் டும்தான். மகாபலிபுரத்தில் இதைப் பற்றி அப்பா உங்களிடம் பேசுவார்'' என்றாள்.

அவளுடைய பேச்சு அவனுக்குப் புரிந்தது. அவளை விழுங்குவது போலப் பார்த்தான்.

'' எனக்கு அப்பா இல்லை. அம்மாவும் என்விருப்பத்துக்குமீறி ஏதும் சொல்ல மாட்டாள். நான் என் வீட்டுக்கு ஒரே பிள்ளை'' என்று ஜம்பமாகக் கூறினான் சங்கர்.

இதைக் கொண்டாடும் விதத்தில் அமர்க்களமாக ஒரு 'ட்ரீட்' கொடுத்தாள் அருணா.

**நா**ன்கு நாட்கள் கழித்து ஒருநாள் காலை







**அதைவிட அதிகமாக......**

சம்பந்தப்படுவேன், அதைவிட அதிகமாகப் பங்கேற்பேன்;

அக்கறை கொள்வேன், அதைவிட அதிகமாக உதவுவேன்;

நம்புவேன், அதைவிட அதிகமாகக் கடைப்பிடிப்பேன்;

நியாய உணர்வுடன் நடப்பேன், அதைவிட அதிகமாக அன்பு காட்டுவேன்;

மன்னிப்பேன், அதைவிட அதிகமாக மறப்பேன்;

கனவு காண்பேன், அதைவிட அதிகமாக உழைப்பேன்;

கற்றுத்தருவேன், அதைவிட அதிகமாக ஊக்கமளிப்பேன்;

கொடுப்பேன், அதைவிட அதிகமாகச் சேவை புரிவேன்;

சிநேகம் பாராட்டுவேன், அதைவிட அதிகமாக நண்பனாய் இருப்பேன்;

குடிமகளாக விளங்குவேன், அதைவிட அதிகமாகத் தேசபக்தையாகத் திகழ்வேன்!

(-- டி. சாந்தினி வயது 13.
சுயராஜ்யாவிலிருந்து தமிழாக்கம்)

oooooooooooooooooooooooooooo

யில் கண் விழித்து எழும் பொழுதே இடது கண்ணில் சுரீர் என்று முள்ளாகக் குத்தியது வலி. அம்மாவிடம் கூறிய பொழுது ''உஷ்ணமாக இருக்கும். எண்ணெய் தேய்த்துக் குளி'' என்றாள்.

நேரமாக நேரமாக வலி நிற்கவில்லை. கண் மசமசவென்று திறக்கவே முடியாத வேதனை. அதன்பின் டாக்டரிடம் போனான். ஏகப்பட்ட பரிசோதனைகளுக்குப் பிறகு மருத்துவமனையில் சேர்ந்தான். ஆபரேஷன் செய்ய வேண்டும்.

டாக்டர்கள் தங்களுக்குள்ளாகவே ஏகப்பட்ட 'டைக்ராம்ஸ்' போட்டு விளக்கிக் கொண்டிருந்தார்கள். மருத்துவமனையில் சேர்ந்த அன்று அருணா வந்து போனாள். அப்பொழுது ஆபரேஷன் செய்யும் நாள் குறிக்கப்படவில்லை.

''என்றைக்கு ஆப்பரேஷன் என்று போனில் தகவல் கொடுங்கள். நான் 'ஏர்போர்ட்' போக வேண்டும். வரட்டுமா ?'' என்று போய்விட்டாள் அருணா.

மருத்துவமனையின் தனிமை அவனை அடிப்பது போல் இருந்தது. அருணாவின் அண்மையை அவன் மிகவும் விரும்பினான். அவனுடன் பேசிக் கொண்டு நிற்க அவளுடைய 'என்கேஜ்மெண்ட்ஸ்' இடம் தரவில்லை. அவள் வெளியே போகும் நிலையிலேயே நின்றாள். பெரிய இடத்து நட்பை உடைய அவளை அவனால் தன்னுடன் நிறுத்திக் கொள்ள இயலுமா ?

அருணா சென்ற சில நிமிடங்களில் புயலைப் போல் கல்யாணி வந்தாள்.

'' சங்கர்! உங்களுக்கு என்ன வந்துவிட்டது ?'' என்று பரபரத்தாள். பார்வை தெரிந்த ஒற்றைக் கண்ணால் கல்யாணியின் முகத்தில் தெரிந்த வேதனையைப் பார்த்தான். அந்தப் பரபரப்பு அவனுக்குத் திருப்தியாக இருந்தது. தனிமையைப் போக்க ஒரு 'கம்பெனி' கிடைத்த நிறைவு நெஞ்சை நிறைத்தது.

அதன்பின் கல்யாணி தினமும் வந்தாள். என்ன இருந்தாலும் அருணாவின் கலகலவென்ற சிரிப்பும், சிரிப்பு கலந்த பேச்சும் கேட்காதது அவனுக்கு வருத்தமே. ஆப்பரேஷனுக்கு முதல் நாள் அவன் அருணாவுக்குப் போன் செய்தான்.

'' ஓ... சங்கர் டியர், வெரி சாரிம்மா. என்னால் வர முடியாது. நான் அமெரிக்க நண்பர்களுடன் மகாபலிபுரத்துக்குப் போகப் போகிறேன் என்பது உங்களுக்கு மறந்துவிட்டதா ? பை... பை ....'' என்ற அருணா போனைக் 'கட்' பண்ணினாள்.

கல்யாணி உள்ளே நுழைந்தாள். ''அலுவலகம் போகவில்லை ? இவ்வளவு முன்னதாக வந்துவிட்டாயே, கல்யாணி ?'' என்று கேட்டான் அவளைப் பார்த்து.

'' இன்றிலிருந்து இன்னும் ஒரு வாரம் லீவ் போட்டிருக்கிறேன். நாளைக்கு ஆப்பரேஷன் ஆயிற்றே. உங்கள் அம்மா இன்னும் சிறிது நேரத்தில் வருவார்'' என்ற கல்யாணி அவன் சாப்பிட வேண்டிய மருந்தை எடுத்துக் கொடுத்தாள்.

**வீ**ட்டுக்கு வந்துவிட்டான் சங்கர். வெளிச்சம் படக் கூடாது என்பதால் ஜன்னல்களுக்குக் கர்ட்டன் போட்ட அறை ஒன்றில் இருந்தான். கண்களுக்குக் கறுப்புக் கண்ணாடி. பொழுது போக டிரான்ஸிஸ்டர் ஒன்று. இரண்டு வேளையும் கல்யாணிதான் கண்களுக்கு மருந்து போடுவாள். நான்கு நாட்களுக்கு ஒரு முறை டாக்டர் வீட்டுக்கு வரும் பொழுதும் அவள்தான் துணை இருப்பாள்.

''ஓ... கல்யாணி, உனக்கு நான் எவ்வளவு சிரமத்தைத் தருகிறேன்'' என்று மனத்தின் நெகிழ்ச்சி குரலில் தழுதழுக்கக் கூறி மருந்திட்டுவிட்டு நிமிர்ந்த பவழமல்லி போன்ற கரத்தின் விரல்களைப் பிடித்துக் கொண்டான்.

''இதில் என்ன சிரமம் சங்கர்?'' என்ற கல்யாணி, முகத்தைத் திருப்பிக் கொண்டு தன் கலக்கத்தை மறைத்துக் கொண்டாள்.

'இப்படிப் பணிவிடை செய்யும் தனக்கு அவனிடம் என்ன இடம் இருக்கிறது?' கண்ணில் துளிர்த்த நீரைக் கரை கட்ட வழி இல்லாமல், ''சங்கர், இன்று உங்கள் நட்சத்திரம். அர்ச்சனை செய்ய வேண்டும். நான் கோயிலுக்குப் போய் வரவா?'' என்று கூறியபடி நகர்ந்தாள்.

**ம**று நாள் மாலை. உறவினர் ஒருவர் வீட்டுக் கல்யாணம் ஆனதால் தட்ட முடியாமல் அம்மா போய்விட்டாள். கதவின் மேல் நாகரிகமாக விழுந்த சிறு தட்டல்களைக்

---

**தெரியுமா?**

'லிப்ஸ்டிக்' தயாரிப்பில் விளக்கெண்ணெய் கலக்கப்படுகிறது.

'பெமினா' — ''ஸரோ''










# ரம்யா
# இவர்கள்
# இருவரையுமே
# திருப்தி செய்கிறது

பொங்கி வரும்
நுரை—
பொலிவு தரும்
சலவை




இத்தரமான தயாரிப்பை அளிப்போர்:
அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு
விற்பனையாளர்கள்: பாரி & கம்பெனி லிமிடெட்

SAA UP/2120



ஹிந்திப் படங்களில் ஹாஸ்யம் நன்றாக இருப்பதில்லை என்பதைப் பிரபல டைரக்டர் சத்யஜித்ரே இப்படிக் கூறுகிறார்: "The main tragedy of a Hindi film is its comedy"

— சரோஜா ராமச்சந்திரன்

---

கேட்ட சங்கர், ''ஓ... கல்யாணி, வந்துவிட்டாயா ? நீ இன்னும் வரவில்லையே என்று காத்துக் கொண்டிருந்தேன்'' என்றான்.

''கல்யாணி இல்லை. நான் அருணா'' என்றபடியே உள்ளே வந்தாள் அருணா.

''உட்கார் அருணா'' என்ற சங்கர் கட்டிலருகே கிடந்த மோடாவை நகர்த்தினான்.

''ஹௌ ஆர் யூ சங்கர் ? கண் நன்றாகத் தெரிகிறதா ?''

''ஆப்பரேஷன் ஆகிப் பத்து நாட்கள் தானே ஆகிறது? அதற்குள் என்ன தெரியும்? மருந்து போட்டுக் கொண்டு வருகிறேன். வலது கண்கூட வலிக்கிறது. அதற்குத் தனக்கு ஆப்பரேஷன் செய்யவில்லை என்ற பொறாமை வந்துவிட்டது என்று நினைக்கிறேன்'' என்ற சங்கர் சிரித்தான்.

ஆனால் அருணா சிரிக்கவில்லை. சங்கர் கட்டிலில் தலையணை மேல் சாய்ந்து கொண்டான். ''மகாபலிபுரப் பிரயாணம் எப்படி இருந்தது?'' என்று விசாரித்தான்.

''ரொம்பவும் குஷியாக இருந்தது.''

''என்னால்தான் அதில் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லை'' என்றான் சங்கர்.

''உங்களுக்கு மிஸ்டர் ரமணனைத் தெரியுமா? டென்னிஸ் போட்டியில்கூட வெற்றி பெற்றவர்.''

''கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''அவர் சரித்திர எம். ஏ. எங்க குடும்ப நண்பர். அவரும் எங்களுடன் வந்திருந்தார். ரொம்ப மகிழ்ச்சியான பிரயாணம்'' என்று ஜாலியாகச் சொன்னாள் அருணா.

சங்கரால் பேசவே முடியவில்லை.

**மா**தங்கள் இரண்டு ஓடிவிட்டன. அருணா அதற்குப்பின் சங்கரைப் பார்க்க வரவில்லை. அவன் உற்சாகம் இல்லாமல் நலிந்து போய் இருந்தான். ஒரு மாலை நேரத்தில் கல்யாணியின் காலடி ஓசையைக் கேட்டவன், 'அருணா' என்று அழைத்துக் கொண்டு எழுந்தான். ஆனால் கல்யாணிதான் வந்தாள்.

அருணாவைத் தேடிக் கொண்டு கல்யாணி அருணாவின் வீட்டுக்குப் போனபொழுது அருணா வெளியில் போவதற்குத் தயாராகிக் காரில் ஏறிக் கொண்டிருந்தாள். ஸ்டார்ட் செய்த காரை நிறுத்தி அவளைப் பார்த்தவள், ''ஓ... நீயா ?'' என்று கேட்டாள்.

அவள் அருகில் ஓர் இளைஞன் உட்கார்ந்திருந்தான். வியப்பா, அலட்சியமா என்று கல்யாணியால் அந்தத் தொனியைப் புரிந்து கொள்ள இயலவில்லை.

''சங்கரைப் பற்றி உன்னிடம் பேச வந்திருக்கிறேன்.''

''காரில் ஏறிக் கொள்; போய்க் கொண்டே பேசலாம்.''

கல்யாணி காரில் ஏறிக் கொண்டாள்.

''சங்கருக்கு எப்படி இருக்கிறது?'' என்றாள் அருணா.

''உன்னைப் பார்க்க விரும்புகிறார்.''

''நான் அடுத்த வாரம் இத்தாலி போகப் போகிறேன். திரும்புவதற்கு இரண்டு வாரங்கள் ஆகும். முடிந்தால் அதற்குள் வருகிறேன் என்று சொல். அவ்வளவுதானே? இதோ பஸ் ஸ்டாண்ட். நீ இறங்கிக் கொள். நாங்கள் போக வேண்டும்.''

அவள் இறங்கிக் கொண்டாள். புடவை ஓரம் காலில் தடுக்கியது. சமாளித்துக் கொண்டு கதவைச் சாத்துவதற்குள், ''பாவம் ஆள் கம்பீரமாகக் கவர்ச்சியாக இருக்கிறாரே என்று அப்பா கல்யாணத்துக்குச் சம்மதித்தார். கண் 'டிபெக்ட்' ஆனதும் அவரை நான் எப்படிக் கல்யாணம் செய்து கொள்வது ?'' என்று அருணா முணுமுணுத்தது கல்யாணியின் காதுகளில் விழுந்தது.

**த**ன்னைத் தேடிச் சங்கரே வருவான் என்று அருணா எதிர்பார்க்கவில்லை. அவளுடைய அப்பாவும், அம்மாவும் அப்பொழுதுதான் வெளியே போயிருந்தார்கள்.

''ஹலோ, எப்படி இருக்கிறீர்கள் ?'' என்று கேட்டாள் அருணா.

''ஐயாம் ஃபைன். நீதான் பார்க்கிறாயே ?''

''அப்படியா ?'' என்ற அருணா துள்ளி எழுந்தாள். ''எனக்கு ஏன் போன் பண்ணவில்லை?'' என்று செல்லமாகக் கோபித்தவள், ''உங்கள் அழகே கண்ணால் கெட்டுப் போய் விடுமோ என்று பயந்தேன். உங்களின் கம்பீர அழகுக்காகவே நான் உங்களை விரும்பினேன். இப்படி ஆனதும் என் அப்பாவும் மிகவும் வருத்தப்பட்டார்'' என்றாள்.

அடுத்த சில கணங்களில் பலகாரங்களும், காப்பியுமாக வந்தன. அவன் எதையும் தொடவில்லை. ''ப்ளீஸ், கொஞ்சம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று வற்புறுத்தவே காப்பியை மட்டும் எடுத்துக் கொண்டான்.

''வாருங்கள், மாடிக்குப் போகலாம்.''

மழைக் காற்று அடித்தது. பாலமிட்டது போல வானவில் வானத்தில் பதிந்து கிடந்தது. குளிர்ந்த சூழ்நிலை. மாடியில் திறந்த வெளியில் செடிகொடிகள் படர்ந்த இடத்தில் சோபா ஊஞ்சல் போடப்பட்டிருந்தது.

''அப்பாவே கல்யாணம் பேச வரவேண்டும் என்றிருந்தார். நான் இத்தாலியை விட்டுப் போன வாரம்தான் வந்தேன்.''

''கல்யாணி சொன்னாள்.''

''கல்யாணம் நிச்சயம் செய்ய அப்பாவை என்றைக்கு வரச் சொல்லட்டும்?''

''கல்யாணத்தன்று வரச் சொல்.''

''என்ன வேடிக்கை பண்ணுகிறீர்கள்?''

''உண்மையைத்தான் சொல்கிறேன். எனக்கும் கல்யாணிக்கும் திருமணம். அன்று உன் அப்பாவும் வரலாம். நீயும் வரலாம். அதற்கு அழைப்பு விடுக்கத்தான் வந்தேன்'' என்ற சங்கர் பத்திரிகையை நீட்டினான்.

யாரும் ஆட்டாமலேயே ஊஞ்சல் ஆடியது காற்றில். மலர்கள் உதிர்ந்தன. மழை காலத்து வான வில் அழகாக இருக்கும்; உல்லாசத்தைக் கொடுக்கும். அதைக் கையால் பிடித்து நிறுத்த முடியாது என்பதை இப்போது உணர்ந்திருந்தான் சங்கர்.

# ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள்... அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்-இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது...வாரக்கணக்கில் பட்டுப் போல் மென்மை—தொட்டுப் பார்த்தால் மழமழப்பு...பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



## ஆன் பிரெஞ்ச்

### ஹேர் ரிமூவர்

அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2-சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffery Manners &Co. Ltd.

126 HR-182 Tam

# உருகாயோ நெஞ்சமே!

ஆலிவர் கிராம்வெல் என்றொரு இராணுவத் தளபதி இங்கிலாந்து தேசத்தை ஆட்சி புரிந்தபோது, கடினமான சட்ட திட்டங்கள் அமலில் இருந்தன. இளம் போர்ச் சேவகன் ஒருவன் ஒரு நாள் இராணுவச் சட்டத்தை மீறியதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கிராம்வெல் முன் கொண்டு வரப்பட்டான். தலைவரும் சட்டப்படி அவனுக்கு மரண தண்டனை விதித்தார். ''நாளை மாலை ஆலய மணி அடிக்கும்பொழுது அவனைத் துப்பாக்கியால் சுடவேண்டும்'' என்றும் உத்தரவிட்டார்.

மறுநாள் மாலை, குறிப்பிட்ட நேரத்தில் அந்தப் போர்ச் சேவகன் கண்களும், கைகளும் கட்டப்பட்டுப் பாறை ஒன்றின்மேல் நிறுத்தப்பட்டான். தொலைவில் இருந்த ஆலய மணியின் ஓசையை எதிர் நோக்கிச் சுடுவதற்கென நியமிக்கப்பட்டிருந்த போர்ச் சேவகர்கள் காத்திருந்தனர். மாலை மறைந்து இருள் வந்தும் மணி ஓசை கேட்கவில்லை. கிராம்வெல் திகைத்தார். துப்பாக்கி பிடித்துக் குற்றவாளியைச் சுடுவதற்கென்று காத்திருந்தோரும் குழம்பினர். குற்றவாளியும் 'ஏன் இன்னும் துப்பாக்கிக் குண்டு வெடிக்கவில்லை?' என்று திகைத்தான்.

அப்பொழுது எங்கிருந்தோ ஓடிவந்த இளம் பெண் ஒருத்தி கிராம்வெல்லின் காலில் விழுந்தாள். அவளால் பேசமுடியவில்லை. இரு கைகளையும் உயர்த்திக் காண்பித்தாள். அவை ஒரேயடியாக நசுங்கிப்போய் இரத்தம் பீறிட்டுக் கொண்டிருந்தன. ஒரு விநாடியில் கிராம்வெல் புரிந்து கொண்டார்.

அந்தப் பெண்ணைக் குற்றம் சாட்டப்பட்ட போர்ச் சேவகனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாகத் தீர்மானமாகி யிருந்தது. அவனுக்கு மரண தண்டனை எனக் கேட்டவுடன் அவள் உள்ளம் பதறியது. எப்படியும் அவனைக் காப்பாற்றுவதென்று விரதம் பூண்டாள். ஆலயத்தில் மணிக் கூண்டிற்குள் மத்தியானமே ஏறி உட்கார்ந்து கொண்டாள். தன் இரு கரங்களாலும் மணியின் இரும்பு நாக்கை இறுகப் பற்றிக் கொண்டாள். ஆலய மணி அடிக்கும் மாலை நேரம் வந்தது. கோவில் வேலையாள் வழக்கம்போல் வந்து ஓங்கி ஓங்கி மணியை அடித்தான். 'மணியின் நாதம் வெளிவந்தால்தானே என் அன்புக்குரியவர் உயிர் போகும்? என் உயிர் போனாலும் சரி. இந்த மணியிலிருந்து ஒரு சிறு நாதமும் வெளி வராது காப்பேன்' எனக் கூறிக் கொண்டாள். அவள் கைகள் இரும்பு மணியில் மோதிச் சிதைவுண்டன. வலியைப் பொறுக்க இயலவில்லை. எனினும் துப்பாக்கி முனையில் அநாதை போல் நிற்கும் தன் அன்பனை நினைத்துப் பல்லைக் கடித்து யாவற்றையும் சகித்துக் கொண்டாள். மணி அடிப்பவனோ ஒரு செவிடன், மணியிலிருந்து நாதம் ஒன்றும் எழவில்லை என்பதையோ தான் கயிற்றை இழுக்க இழுக்க ஒரு பெண்ணின் கைகள் நொறுங்குகின்றன என்பதையோ அவன் கவனிக்கவில்லை. மணி அடித்து முடித்ததும் அவன் தன் வேலை முடிந்தது என்று தன் வழியே போனான். ஏழைப் பெண்ணும் வேகமாய்க் கீழிறங்கி தன் அன்பன் உயிர் இருக்கின்றதோ எனக் காண உள்ளம் பதைத்து ஓடி வந்தாள். கிராம்வெல்லைக் கண்டாள். 'தஞ்சம்' என அவன் பாதத்தில் வீழ்ந்தாள்.

கிராம்வெல்லின் உள்ளம் உருகிற்று. ''உன் அன்பன் உயிர் பிழைப்பான்'' என உறுதி கூறினார்.

ஆதாரம்: 'உருகாயோ நெஞ்சமே' என்ற நூல். தகவல்: **என். எஸ். நாதன்.**





குட்டிக் கதைகள்

# கழுதையின் துயரம்

ஏ. என். பட்

பொதி சுமந்து உழைக்க வேண்டியிருக்கிறதே என்று கழுதை ரொம்ப வருத்தப்பட்டது. ஆண்டவன் கருணை கொண்டு பிரத்யட்சமாகி ''என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டான். ''எனக்குச் சிங்கம் போன்ற பலத்தைக் கொடுங்கள். அப்போது எனக்குப் பொதி சுமப்பது சிரமமாகத் தெரியாது'' என்றது கழுதை. ஆண்டவன் அவ்வாறே அருளினான்.

கடுமையான சுமையைக் கழுதை அலட்சியமாகச் சுமப்பதைக் கண்டான் அதன் எஜமானன். எனவே மேலும் மேலும் சுமை ஏற்றினான். கழுதை, தான் கோரிய வரம் வீணாகிப் போனதாக அறிந்தது. உடனே ஆண்டவனிடம் முறையிட்டது.

''என்னிடம் ஏற்கெனவே இயல்பாக இருந்த பலத்தையும் குறைத்து விடுங்கள். அப்போதுதான் என் எஜமானன் சுமையைக் குறைப்பான்'' என்று கூறி அழுதது. இறைவனும் அவ்விதமே வரம் அருளினான்.

மறுநாள் கழுதையின் எஜமானன், அது இலேசான பாரத்தைக் கூட சுமக்காது தடுமாறுவதைக் கண்டான். அது நடிப்பதாக எண்ணினான். கோபத்தில் அதனை அடி அடியென்று அடித்தான். ''வேலை செய்ய உடம்பு வணங்கவில்லையா?'' என்று கேட்டு மேலும் வாங்கு வாங்கென்று வாங்கினான்!

கழுதை வெலவெலத்துப் போயிற்று. ஆண்டவனிடம் அழுது புலம்பி இயற்கையாகத் தனக்கு இருக்க வேண்டிய பலத்தை மட்டும் தருமாறு கெஞ்சியது. இறைவன் கருணை கொண்டு அவ்விதமே அருளினான். கழுதையும் தனது வழக்கமான வாழ்க்கையில் திருப்தியுற்றது.

நீதி: (நீங்களே எழுதிக் கொள்ளவும்)

# கிண்டலுக்குள்ளான எறும்புகள்



காட்டிலிருந்த சில மிருகங்கள் எறும்புகளைக் கேலி செய்தன. மான், கோழி, ஆமை முதலியன, ''விலங்குகள் உலகிலேயே எறும்புகள்தாம் மிகவும் பலவீனமானவை'' என்று கிண்டல் செய்தன.

அச்சமயம் பூமி அதிர்வது போலிருந்தது. எறும்புகள் அவசரம் அவசரமாக ஒரு பாறைக் கடியில் மறைந்து கொண்டன. மதம்பிடித்த யானைகள் சில பூமி அதிர ஓடி வந்தன. சிறிது நேரம் கழித்து அந்தச் சப்தம் ஓய்ந்தது. எறும்புகள் பாறையின்பாதுகாப்பைவிட்டுவெளிப்பட்டு வந்து பார்த்தன. தங்களைக் கேலி செய்த நண்பர்கள் எல்லாம் மிதிபட்டு இறந்து கிடப்பதைக் கண்டு வருந்தின. உயிர் பிழைத்தவை எறும்புகள் மட்டுமே! சின்ன உருவில் தங்களைப் படைத்த ஆண்டவனுக்கு அவை நன்றி செலுத்தின.

நீதி: (நீங்களே எழுதிக் கொள்ளவும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam Associate Editor: K. Rajendran.

# ஓரியண்ட்

## காற்றிற்கு அழகூட்டும் ஃபேன்கள்

இந்தியாவில் ஃபேன்கள் தயாரிப்பதில் அனுபவமிருந்தவர்களால் செய்த ஓரியண்ட் ஸீலிங் ஃபேன்கள் எல்லாம் நவீன கால டிஸைனும் இணையற்ற நேர்த்தியும் கொண்டவை. உங்கள் குறிப்பிட்ட தேவைகளுக்கும் நவீனகால வீடுகளின் அழகிற்கு அழகு செய்யவும் ஏற்ற பல்வேறு அளவுகளில் மி.மீ. 900 லிருந்து 1500 மி.மீ. வரை கிடைக்கின்றன. அனைத்து தயாரிப்பு நிலைகளிலும் கண்டிப்பான தரக்கட்டுப்பாடுடன் இடைவிடாத ஆராய்ச்சியும் அபிவிருத்தியும் செய்திருப்பதால் ஆண்டுக்கணக்கில் அசைவற்றும் அமைதியாகவும் தொந்தரவு இல்லாமலும் உழைக்கின்றன.

இரண்டுவருட உத்தரவாதம்

**ஓரியண்ட்**
**விசிறிகள்**

நீண்டகாலமிருக்கும் ஃபேன்கள் வாழ்நாள் முழுதுமான சிக்கனத்திற்கு

**ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**

6, கோர் பீபி லேன், கல்கத்தா-700 054

தொழிற் சாலைகள் : கல்கத்தா மற்றும் பரிதாபாத்

CC/OGI-4/76 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு

அம்மா அவங்க பாத்ரூம் ஏன் அவ்வளவு நாற்றமடிக்குது நம்முடையது எவ்வளவு வாசனையா யிருக்கு?

கண்ணு, நாம ஓடோனில் உபயோகிக்கிறோம்




ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், நிறங்களில், டப்பாக்களில் கிடைக்கின்றன.




பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்